

அப்பு ஒரு
மால்டோவா
ரசிகன்!

# மால்டோவா
# ஏசியாட் ஆரோக்கிய பானம்.

ASP/JIL 82 Tam

Monde (உலக) தரத் தேர்வில் தங்க மெடல் வென்ற மால்டோவா இப்போது ஏசியாட் 82 விளையாட்டுப் போட்டியின் ஆரோக்கிய பானமாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. ஆகவே, ஆசிய விளையாட்டு வீரா ஒவ்வொருவரும் தினம் சுவை மிகக மால்டோவா பருகி ஆரோக்கியம், பலம் மற்றும் சக்தியுடன் போட்டியில் பங்கெடுக்கத் தொடங்கலாம். போட்டியில் தங்க மெடல் பெறுவதற்கு இதைவிடச் சிறந்த வழியும் உண்டோ!






Official Suppliers to



வைட்டமின்கள் கூடிய
## மால்டோவா
ஆரோக்கியம், பலம் மற்றும் சக்திக்கு

JiL ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

Monde (உலக) தரத் தேர்வில் 'பாஸ்டிக்ஸ்' உடன் கூடிய தங்க மெடல் பெற்றது. ஆம்ஸ்டர்டாம், 1981.



# பெரிய மனிதர்கள் சின்னச் செய்திகள்!



கிருபானந்த வாரியார்:

அன்றாடம் தமக்கு வரும் கடிதங்கள் எல்லாவற்றுக்கும், அன்றன்றே பதில் எழுதும் பழக்கம் கொண்டவர்.

வானதி திருநாவுக்கரசு:

இரவு தூங்கப் போகும்போது கர்நாடக இசை கேட்டுவிட்டுத் தூங்குவது பழக்கம். சுமார் 60 கர்நாடக இசை காஸெட்டுகள் வைத்திருக்கிறார்.



சாண்டில்யன்:

தாம் எழுத வேண்டியதையெல்லாம் காலை ஐந்து மணிக்கு எழுந்து, சூடாக ஒரு கப் காப்பி சாப்பிட்டுவிட்டு, எழுதத் தொடங்கி ஆறரை ஏழுவரை எழுதுவார். அப்புறம் எழுதுவதில்லை.



நா. மகாலிங்கம்:

கையில் தம் தந்தை உருவம் பொறித்த மோதிரம் அணிந்திருப்பார். தூங்கி எழுகையில், தூங்கப் போகையில் மோதிரத்தினைப் பார்த்து, தந்தையை வணங்கும் பழக்கம் உண்டு.



கே. பாக்கியராஜ்:

தினமும் காலையில் எழுந்தவுடன் காப்பி குடித்துவிட்டு வீட்டின் மொட்டை மாடியில் சுமார் ஒரு மணி நேரம் கடுமையான உடற் பயிற்சிகள் செய்கிறார்.

குமரி அனந்தன்:

தலைவர் காமராஜ் மறைவுக்குப் பின் மாமிச உணவு வகைகளைச் சாப்பிடுவதை நிறுத்திவிட்டார்.



சிவசங்கரி:

சில காலமாய்த் தாமே சொந்தமாய் சுத்த கர்நாடக ராகங்களில், தமிழ் கீர்த்தனைகள் எழுதி, பாடி வருகிறார். புதிய நாய்க்குட்டி (ஸ்யாமா-2) வரும் ஜூனுக்குள் வந்துவிடுமாம்.

மாருதி:

இவருக்குச் சமீபத்தில் பிறந்துள்ள முதல் பெண் குழந்தைக்குப் பெயர் சுபாஷிணி'. சுபாஷ் சந்திர போஸ் மீதுள்ள பக்தியினால் இப்பெயர் சூட்டியுள்ளார்.

—எஸ். சந்திரமௌலி















⌘ நேசன், சென்னை-61

? ஆர்.எஸ்.எஸ்.பற்றிய கேள்வியில் தராசுவின் தட்டு ஒரு பக்கமாகச் சாய்ந்து விட்டதே?

! ஆர். எஸ். எஸ்.ஸை எனக்குப் பின்னால் இன்னொருவரும் எடை போட்டிருக்கிறார். சஞ்சை — ராஜீவ் — இந்திரா காந்தி அபிமானி குஷ்வந்த் சிங். ஆர். எஸ். எஸ்ஸின் ஒரு கூட்டத்துக்குப் போய் வந்தவர் அதன் பல்வேறு சிறப்புக்களைக் கண்டு பிரமிப்புடன் பாராட்டி எழுதியிருக்கிறார். 'முஸ்லிம்களையும் ஏன் நிறைய அளவில் சேர்த்துக் கொள்ளக் கூடாது?' என்று யோசனை கூறுவதற்கு அதிகமாக ஒரு குற்றமும் கண்டுபிடிக்கவில்லை.

⌘ பிரகாஷ்முரளி, குரோம்பேட்டை

? கல்கி அன்றும் இன்றும் ஒப்பிடுக.

! பழைய நாள் கல்கியில் கவிமணியின் ஒரு கவிதையோடு இணைந்து ஆறுல் பட விளக்கம் ஏதுமின்றி அவர் கல்கி படிப்பது போல் ஒரு படம் பிரசுரமாகிப் பார்த்துப் பெருமைப்பட்டிருக்கிறேன். சமீபத்திய கல்கியில் ஏதோ உலக மகா அதிசயம் போல் ''கார்த்திக் கல்கி படிக்கிறார்'' என்று கொட்டை எழுத்து விளக்கத்துடன் பெரிதாக ஒரு படம்! இப்படிக் கல்கியில் பிரசுரமானதுதான் உலக மகா அதிசயம்!

⌘ ஆர். கே. லிங்கேசன், மேல கிருஷ்ணன் புதூர்

? அறிஞர் பேசும் தத்துவத்துக்கும் அரசியல் தலைவன் பேசும் தத்துவத்துக்கும் உள்ள பேதம் என்ன?

! அறிஞர் தத்துவம் பேசினால் ''எந்த விஷயத்திலும் சாதி வித்தியாசம் பாராட்டாதீர்கள்'' என்பார். அரசியல்வாதி தத்துவம் பேசினால்''கல்விக் கூடங்களில் இட ஒதுக்கீடுக்கு மட்டும் சாதி பயன்படட்டும்; இதய ஒதுக்கீட்டுக்குச் சாதி கூடவே கூடாது!'' என்பார். இது மு. கருணாநிதியின் லேட்டஸ்ட் முழக்கம்! கல்லூரியில் சேர சாதி, உத்தியோகத்தில் சேர சாதி,வேட்பாளரை நிறுத்தி வைப்பதில் சாதி; பதவி உயர்வுக்கும் சாதி ஆனாலும் ''இதயத்தால் நாம் எல்லோரும் ஒரே சாதி! தமிழ் சாதி!'' என்று அறிஞரால் அல்ல அரசியல் வாதியால்தான் பேச முடியும்.

⌘ எம். வேங்கடராமன், எட்டயபுரம்

? கலை - கலை ஒப்பிடவும்.

! தமிழ் புத்தாண்டு பிறக்கும் வேளையில் 12 வயது வி. சுரேஷ் தாத்தா கோவிந்தசாமி நாயக்கருடன் சேர்ந்து மயிலை கபாலி கோயிலில் கச்சேரி செய்தானே அது. பாரம்பரியப் பெருமை காக்கும் கலை. தாத்தாவின் பிரமாத மோகனத்துக்குப் பின் கபாலி கீர்த்தனையில் ஸ்வர பிரஸ்தாரத்தில் தாத்தாவுக்கு அபாரமாய் ஈடு கொடுத்தான். கிட்டாரில் கர்நாடக சங்கீதத்தை வாசித்தாலும் இனிமை குன்றாது சம்பிரதாயம் காக்கிறாரே இளைஞர் சுகுமார் பிரசாத். அது கலை — கலை சிறப்பதால்.
கர்நாடக சங்கீதத்தின் இனிமை — அமைதிகளைக் குலைப்பது போல் பரபரவென்று சிலர் வயலின், வீணைகளைக் கையாள்கிறார்களே அது கலை — களையப்பட வேண்டியதால்.

⌘ ஆர். அரி கோபி, தாணம்பேட்டை

? அனுபவங்கள் மூலமாகத்தான் தத்துவங்கள் பிறக்கின்றனவா?

! சந்தேகமில்லாமல். இந்திரா காந்தி அண்மையில் நமது விமானப் படைத் தளபதிகளைச் சந்தித்தபோது. ''மிக நவீனமான விமானங்களையும் துணை உபகரணங்களையும் விட நமது விமானிகளின் ஆற்றலிலும் தேச பக்தியிலும் தான் நான் அதிக நம்பிக்கை வைத்திருக்கிறேன்'' என்ற பொன் மொழியை உதிர்த்திருக்க முடிந்தது என்றால் அது அனுபவம் காரணமாகப் பிறந்த தத்துவம்தான்.

⌘ பூவை. கே. சந்திரன், பாண்டமங்கலம்.

? சாமர்த்தியசாலி என்றால் யார்?

! எனக்குத் தெரிந்த ஒருவர் ஏ. வி. எம். சரவணன்' திரைப்படத் துறை, அச்சகத் துறை, இசைத்தட்டுத் துறை அனைத்தையும் நிர்வகிப்பதில் திறமைசாலி. தம்மைப் பற்றி ஒரு சிறு குறிப்பு எந்தப் பத்திரிகையில் எந்த ஒரு மூலையில் வந்திருந்தாலும் ஒரு 'தாங்க்யூ நோட்' அனுப்பி விடுவதால் சாமர்த்தியசாலி. தராசுக்கு முதல் தாங்க்யூ கடிதம் பெற்றுத் தரப்போகும் சந்திரனுக்கு ஒரு தாங்க்ஸ்!



⌘ எல். ஆர். விஜயகுமார் சென்னை-28

? விவசாயிகளுக்கு விமோசனமே கிடையாதா?

! உண்டு. அரசியல்வாதிகளின் பிடியிலிருந்து தப்பிப் பொருளாதார நிபுணர்களின் கவனத்துக்கு உள்ளானால்! இன்று காணப்படும் சில முரண்பாடுகள்: (1) சோஷலிஸம் பேசிய அரசியல்வாதிகள் நில உச்சவரம்பினை 15 ஏக்கருக்குப் படிப்படியாகக் குறைத்தார்கள். இன்று நாராயணசாமி நாயுடு '15 ஏக்கரில் விவசாயம் கட்டுப்படியாகுமா?மற்றத் துறைகளில் உள்ளோர் எவ்வளவு வேணுமானாலும் சொத்து வைத்துக் கொள்ளலாம்; விவசாயிக்கு மட்டும் உச்சவரம்பா என்று சீறுகிறார். (2) 'நெல் கொள்முதலில் விவசாயிக்குக் கட்டுப்படியாகக் கூடிய விலையைக் கொடு. இல்லையேல் கிளர்ச்சி' என்று மிரட்டுகிறது தமிழக இ. காங்கிரஸ் கட்சி. 'அதிக விலை தர முடியாமல் எங்கள் கைகளைக் கட்டிப் போட்டிருப்பது மத்திய இ. காங்கிரஸ் ஆட்சிதானே' என்கிறது தமிழக அரசு. (3) விவசாயிகள் கடன் பாக்கி, வரி பாக்கி, மின் கட்டணம் முதலானவற்றைச் சரியாக வசூலிக்கவில்லையானால் தேசப் பொருளாதாரமே சீர்குலையும் என்று அஞ்சி ரிசர்வ் வங்கி மூலமாக மாநில அரசுகளை முடுக்குகிறது இ. காங்கிரஸ் மத்திய அரசு. மாநில இ. காங்கிரஸ் கட்சியும் அதன் தோழமை தி.மு.க. கட்சியும் 'ஐயோ! விவசாயிகளைக் கொடுமைப்படுத்துகிறார் எம்.ஜி. ஆர்.' என்று புலம்புகின்றன.

அரசியல்வாதிகளின் இரட்டை வேடம், பொருளாதாரக் கண்ணோட்டமின்மை ஆகியவற்றுக்கிடையில் சிக்கித் தவிப்பவன் விவசாயி.



⌘ பி. எல். பரமசிவம், மதுரை

? எந்தப்பொருள் மீது உங்களுக்கு மோகம் அதிகம்?

! சவூதியில் பிரதமருக்கு அளிக்கப்பட்ட ராஜ மரியாதை வரவேற்பின்போது அவர் பயணம் செய்த தங்கக் கார் மீது நான் மோகம் கொள்ளலாம். ஆவது என்ன?



⌘ எஸ். லதா, ஈரோடு-9

? நாடக பூர்ணம் - சினிமா பூர்ணம் ஒப்பிடுக.

! நாடக பூர்ணம் — இந்திரா சவூதி இளவரசருக்குப் பரிசளித்த யானை எனில், சினிமா பூர்ணம் — சவூதிஇளவரசர் இந்திராவுக்குப் பரிசளித்த ஒட்டகம்! பூர்ணம் எதற்கு முக்கியத்துவம் தந்தாலும் சரி, நமக்கு இரண்டுமே முக்கியமானதாகப் படுகிறது!

ரூ 10 பரிசு பெறுபவர்:
எல். ஆர். விஜயகுமார்
A. 25, பட்டினப்பாக்கம் காலனி, சென்னை-28



# நீங்கள் கேட்டவை

# தராசு



○ வி. ஆர். நரசிம்மன்

# நடக்க முடியாதது நடந்தது!




○ பந்து கிண்ண மூட்டில் உடைந்த இடம்

மருத்துவத் துறை முன்னேற்றம் காரணமாக சமீப காலத்தில் எவ்வளவோ அற்புதங்கள். சென்னை வடபழநியில் உள்ள விஜயா மருத்துவ மனையில் சிகிச்சை பெற்ற திரு வி. ஆர். நரசிம்மன் தமது அனுபவத்தைக் கூறுகிறார்:

''ஒரு விழாவில் பங்கெடுத்துக் கொள்ள, குற்றாலம் சென்றபோது, என்னுடைய சொற்பொழிவை முடித்து விட்டு பாத்ரூம் போனவன் கால் இடறி வழுக்கி விழுந்தேன். என் சத்தத்தைக்கேட்டு ஓடிவந்தவர்கள் என்னைப் பிடித்துத் தூக்கி நாற்காலியில் எப்படியோ அமர்த்தினார்கள். எனக்கு அப்போது வலி ஏதும் பெரிதாகத் தெரியவில்லை. அப்புறம் பேசியவர்களின் சொற்பொழிவையும் கேட்டு, ரசித்து—

''பிறகுதான் வலியை உணர்ந்தேன். தென்காசியில் உள்ள நர்சிங் ஹோம் ஒன்றில் சேர்ந்து எக்ஸ்ரே எடுத்துப் பார்த்ததில், எலும்பு முறிவு இருப்பது தெரிந்தது. இடுப்பும் தொடையும் சேரும் இடத்தில் தொடையின் தலைப் பாகத்தில் உள்ள பந்துக்கிண்ண மூட்டில், பந்து உடைந்திருந்தது! ஒரு நாள் அங்கே இருந்த பிறகு, சென்னை வந்து இங்கே விஜயா மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டேன்.

''பந்துக்கிண்ண மூட்டில் எலும்பு முறிவு ஏற்பட்டால் எலும்பு சேராது. ஏனென்றால் முறிந்த இரண்டு பகுதிகளையும் சரியாகக் கட்டி வைத்து அசைவு இல்லாமல் செய்ய முடியாது. எலும்பு கூடாமலே போய்விடும். எனவே ஆபரேஷன் செய்துதான் சேர்க்க வேண்டும். நடுத்தர வயதினருக்கு இம்மாதிரி எலும்பு முறிவு ஏற்பட்டால் ஆபரேஷனில் உடைந்த எலும்பை மறுபடியும் சேரவைத்துக் கம்பியோ, ஸ்க்ரூ போன்ற ஆணியோ வைத்து உள்ளேயே பொருத்தி விடுவார்கள். ஆனால் இம்மாதிரி பொருத்தப்பட்டவர் படுக்கையிலேயே ஆறு முதல் எட்டு வாரம் வரை இருக்க வேண்டும். வயதானவர்கள் இத்தனை நீண்ட காலம் படுத்தபடி இருந்தால் வயிற்று உப்புசம், படுக்கைப் புண், சிறுநீர் கழிக்கத் தொந்தரவுகள், ப்ராங்கைடிஸ், நியுமோனியா என்று எந்த நோயும் பின் விளைவாக வர வாய்ப்பு உண்டு. ஏன், இதய நோய்கூட வரலாம்! அதனால் அவர்களை உடனே நடக்க வைக்க வேண்டும்.

''எலும்பு முறிவுச் சிகிச்சை நிபுணரான டாக்டர் மோகன்தாஸ், என் நிலைமையைப் பரிசோதித்துப் பார்த்த உடனே, உடைந்த பந்து போன்ற தலைப்பாகத்தை எடுத்துவிட்டு செயற்கையாகத் தயாரிக்கப்பட்ட கலவை உலோகத்தினால் ஆன பந்து ஒன்றைப் பொருத்தி இருக்கிறார்! பந்தை இறுக்கமாகப் பொருத்த எலும்பு ஒட்டும் சிமெண்ட் உபயோகித்தார். இதன் மூலம் அடிபட்ட நான் அன்று மாலையே எழுந்து நிற்க முடிந்தது. பிறகு ஒரு படி — இரண்டு படி ஏறி இறங்க, பத்து இருபது கெஜ தூரம் நடக்க முடிந்தது. இப்போது நன்றாக நடமாட முடிகிறது.

இந்த அற்புதமான பணியைச் செய்த டாக்டர் மோகன்தாஸைப் பாராட்டினால் ''நான் என்ன பிரமாதமாகச் செய்துவிட்டேன்'' என்கிறார். ''இது ஒரு டீம் ஒர்க். அனஸ்தடிக் டாக்டர் விஜயலக்ஷ்மி, என் உதவியாளர் டாக்டர் பேரி, முக்கியமாக இதய நோய்ச் சிகிச்சை வல்லுநர் டாக்டர் செரியன் எல்லோரும் சேர்ந்துதான் இந்தச் சிகிச்சையை வெற்றிகரமாக்கினார்கள்'' என்கிறார்!

அதிக நாள் படுக்கையிலிருந்து படும் அவஸ்தைகளையும், அதனால் வரும் கொடிய விளைவுகளையும், இந்தப் புதிய சிகிச்சை முறை அறவே தவிர்த்து விடுகிறது. நாட்டின் பல பாகங்களிலிருந்தும் இந்தச் சிகிச்சைக்காகவே சென்னைக்குப் பலரும் வருகிறார்கள்.

''முழு இடுப்பு மாற்று அறுவைச் சிகிச்சை (டோடல் ஹிப் ரீப்ளேஸ்மெண்ட்) கூடச் செய்யலாம்: முப்பது நாற்பது ஆண்டுகளுக்குத் தாங்கும்'' என்கிறார் டாக்டர் மோகன்தாஸ்!

பேட்டி : சாருகேசி தமயந்தி

ஆங்கிலத்தில்

## பேசக் கற்றுக்கொள்ளுங்கள்




**Big Size**
**384 Pages**
**Price 21/-**
**Postage**
**Rs. 4/-**

**RAPIDEX**
**ENGLISH SPEAKING COURSE**

தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஹிந்தி, மராட்டி, வங்காளம், பஞ்சாபி மற்றும் குஜராத்தி மொழிகளில் தனித்தனியாகக் கிடைக்கும்.

- எளிய நடையில் பயனுற அமைந்த 'ரெபிடெக்ஸ் இங்கிலீஷ் கோர்ஸினைத் தாமே பயின்று ஆங்கில மொழி வட்டாரங்களில் வெற்றி நடை போடுங்கள்.
- மொழியியல் அடிப்படையில் இதன் புதுமுறை அமைப்பும், தெளிவான மொழி நடையும் படித்த மாத்திரத்திலேயே மனதிற் பதியவைக்க வல்லது.
- இதுவரை 80 லட்சம் பேர் படித்துப் பயன் பெற்றது.
- ஆசிரியர்கள், அறிஞர்கள் மற்றும் கல்வியாளர்களால் பரிந்துரைக்கப் பட்டது.
- பெயர் பெற்ற பத்திரிகைகளின் விமரிசனக் குழுவினரால் புகழாரம் சூட்டப்பட்டது.

மொழியைக் குறிப்பிட்டு ஆர்டர் அனுப்புக.

## கடிதம் எழுதக் கற்றுக்கொள்ளுங்கள்




**Big Size**
**394 Pages**
**Price 21/-**
**Postage**
**Rs. 4/-**

கடிதங்கள் வரைவது விளையாட்டல்ல. ஆனால் உங்களுக்காக இக்கலையை விளையாட்டைப் போலச் செய்து தந்துள்ளோம். நண்பருக்குக் கடிதம் எழுதுங்கள் அல்லது நிறுவனத்துக்கு எழுதுங்கள்—எந்தச் சூழ்நிலையிலும் உங்களுக்கு உதவுவது

***Rapidex***
***Self Letter Drafting Course***

இதன் சிறப்பியல்புகள் —

- விதவிதமான வாக்கியங்கள், பலவேறு சொற்றொடர்கள்.
- ஒரே சூழலில் விதவிதமான வாக்கியங்கள், பல்வேறு சொற்றொடர்கள்.
- விரும்பும் வாக்கியங்களை நீங்களே தேர்ந்தெடுக்கலாம்.
- வேண்டியபடி கோர்வையாக அமைத்துக்கொள்ளலாம்.
- நீங்கள் விரும்பிய கடிதம் இதோ தயார்.

மன உளைச்சலின்றி முதற்தரமான கடிதங்கள் வரைய அற்புத சாதனம்.

மூன்று பகுதிகளாக அமைந்த இப்புத்தகம் சொந்த, சமூக, வணிகக் கடிதங்கள் வரையவும், வேலைக்கான விண்ணப்பங்கள் எழுதவும் நம்பகமான வழிகாட்டி.

*AVAILABLE AT leading book shops, A. H. Wheeler's and Higginbotham's Railway Book Stalls throughout India.*



or ask by V.P.P. from

**PUSTAK MAHAL** **KHARI BAOLI DELHI-6**

New Show Room: 10-B, Netaji Subhash Marg, Darya Ganj, New Delhi-2

VANDANA/PM/Tam.1

கல்கி
1982 மே 2
துந்துபி சித்திரை 19
மலர் : 40 இதழ் : 40

தமிழ்த்திரு நாட்டைத் தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்



# கர்நாடகக் கிளர்ச்சி

மொழிவாரி ராஜ்யப் பிரிவினையைத் தொடக்கத்திலேயே கண்டித்தவர் ராஜாஜி. அதற்காக அவர் மீது ஆத்திரம் கொண்டு சாடினார்கள் பல ஆந்திர சகோதரர்கள். நேருஜியும் இவ்விஷயத்தில் ராஜாஜி கட்சியே. ஆயினும் அவராலும் மகாராஷ்டிரம் பிரிவதைத் தடுக்க முடியவில்லை. தொடர்ந்து மொழிவாரி மாநிலங்கள் அனைத்துமே அமைந்தன. அதன் விரும்பத் தகாத பின் விளைவுகள் பலவும் தோன்றின. சமீபத்திய அனுபவம் கர்நாடக மாநிலத்தில் வன்முறைக் கிளர்ச்சிகள்.

கோகக் கமிட்டி அறிக்கையை அப்படியே ஏற்று அமுல் படுத்த வேண்டும் என்று கன்னடக் கிளர்ச்சியாளர்கள் வற்புறுத்துவதோடு வன்முறையையும் கட்டவிழ்த்து விட்டிருக்கிறார்கள்.

கர்நாடகத்தில் மட்டுமல்ல. இந்தியாவின் ஒவ்வொரு மாநிலத்திலுமே அயல் மாநிலத்தவர் ஏராளமாக வசிக்கிறார்கள். பள்ளிகளில் படிக்கிற அவர்களின் குழந்தைகள் தங்கள் தாய்மொழியை இரண்டாம் பட்சமாக்கிவிட்டு, தாங்கள் வசிக்கும் மாநிலத்தின் மொழியை ஒரே பிரதான மொழியாகக் கருதவேண்டும் என்று கட்டாயப்படுத்துவது எப்படி நியாயமாகும்? எனவே கோகக் கமிட்டியின் இந்தச் சிபாரிசை கர்நாடக அரசு நிராகரித்தது. பிரதான மொழி அந்தஸ்தைக் கன்னடம் அல்லது அவரவர் தாய் மொழிக்கு அளித்தது. இதைத் தவிர இரண்டாவது, மூன்றாவது மொழியாக மேலும் இரு மொழிகளை மாணவர்கள் பயில வேண்டும். பிரதான மொழியாகக் கன்னடத்தை ஏற்காதவர் அதனை இரண்டாவது மொழியாக ஏற்றே ஆகவேண்டும். மூன்றாவது மொழியாகப் பிடித்தமான ஒரு மொழியைப் படிக்கலாம். இவ்வாறு தீர்மானித்துள்ள கர்நாடக அரசு கோகக் அறிக்கையின் படி கன்னடத்துக்கு ''ஒரே பிரதான மொழி'' என்ற அந்தஸ்தை அளிக்காத போனாலும் கன்னடத்தைப் படித்தே ஆகவேண்டும் என்று அனைவரையும் கட்டாயப்படுத்துகிற அளவில் கோகக் கமிட்டி அறிக்கையை விசுவாசத்துடன் பின்பற்றவே செய்கிறது.

இனி ஒவ்வொரு மாநிலத்திலும் இதே போல் கிளர்ச்சிகள் நடக்கும் என்றும் 'கன்னடம் படிக்காதவர்களுக்குக் கர்நாடகத்தில் என்ன வேலை?' என்று கன்னடியர் கேட்பது போலவே ஒவ்வொரு மாநில மக்களும் கேட்பார்கள் என்றும் எதிர்பார்க்கலாம்! இந்தக் கிளர்ச்சிகளில் பலியாகிறவர்களோடு சேர்த்து இந்திய மக்களின் ஒருமைப்பாடு உணர்வுக்கும் சமாதி கட்டலாம்; சிறுபான்மையினர் கருத்துக்கு மதிப்பளிக்கும் ஜனநாயக மரபுக்கும் நடுகல் வைக்கலாம்.

கர்நாடக மக்களை மட்டும் குறை கூறுவானேன்? என்றைக்குச் சிறுபான்மையினர் மொழியான ஹிந்தியைக் கட்டாயமாகப் பெரும்பான்மை இந்திய மக்கள் அனைவர் மீதும் திணிப்பது என்று மத்திய அரசு முடிவுகட்டி நேர்முகமாகவும் மறைமுகமாகவும் அதற்கான தீவிர நடவடிக்கைகளை எடுத்து வருகிறதோ அப்போதே மாநிலங்களிலும் பெரும்பான்மை மக்கள் பேசும் மொழி சிறுபான்மையினர் மீது திணிக்கப்படும் என்று எதிர்பார்க்க வேண்டியதுதானே.

முதலில் தாய்மொழி, அடுத்து இரண்டாவது மொழியாக மத்திய மாநில தொடர்புக்கும் மாநிலங்களிடையே தொடர்புக்கும் அயல்நாட்டுத் தொடர்புக்கும் உதவும் ஆங்கிலம், மூன்றாவதாக அவரவரும் விரும்பும் ஏதேனும் ஒரு மொழி என்ற திட்டம்தான் ஆரோக்கியமானது, அறிவு சார்ந்தது, சமத்துவமானது. ஆட்சி மொழி, பள்ளிப் பாடமொழி போதனா மொழி போன்ற பல பிரச்னைகளையும் ஏற்றத் தாழ்வின்றி எளிதாகத் தீர்த்து வைப்பது.

இதை ஏற்காதவரை சிலர் இரு மொழிகள் பயின்றாலே போதும்; சிலர் ஐந்து மொழிகள் பயின்றாலும் போதாது என்ற அநீதியான நிலை நீடிக்கவே செய்யும்.

# 16

சந்தியா பரபரப்புடன் பின் பக்கத்துக் கதவைத் திறந்தாள். அதற்குள் மழை நின்று போய் நன்றாகப் பொழுது விடிந்து விட்டிருந்தது. ஆனால் தோட்டத்தில் அவள் கண்ட காட்சி... மாட்டுக் கொட்டிலின் கூரை சாய்ந்து சுவர் இடிந்து தரை மட்டத்தில் கிடந்தது.

''ஐயோ செல்லக்குட்டி....'' என்று அலறிய அத்தை மாடும் கன்றும் திகைப்புடன் கீரைப் பாத்தியைத் துவம்சம் செய்தபடி நின்று கொண்டிருந்ததைக் கண்டாள்.

கொட்டகை விழுந்த அதிர்ச்சியில் கட்டுத் தறி அவிழ்ந்து அவை காயமடையாது எப்படியோ தப்பின. போகட்டும் கீரைப்பாத்தி! சந்தியாவின் மனத்தில் ஆறுதல்.

இடிந்து கிடந்த கொட்டகையைத் திகைப்புடன் பார்த்தபடி மாட்டையும் கன்றையும் பிடித்து இழுத்து வந்து பின் பக்க வராந்தாவின் தூணில் கட்டினாள்.

தொடர்ந்து பெய்யப் போகும் மழையில் அவைகளை அங்கே கட்டி வைக்க முடியாது. சமையல் அறைக்கு அருகே உள்ள தாழ்வாரத்தில்தான் கட்ட வேண்டும்.

சாண நாற்றத்தில்... கொசுத் தொல்லையுடன் அவர்கள் அவைகளுடன் கொட்டிலைப் புதுப்பிக்கும்வரை வாழ்ந்தாக வேண்டும்.

''அத்தை... கொட்டில் கட்ட....'' என்று கேட்குமுன் ஜகதா முகம் இடுங்கிப் போனாள்.

''நமக்கு ஏன் இப்படிச் சோதனை மேல் சோதனையோ தெரியாது சந்தியா... புதுசா கொட்டில் கட்ட ஏகப்பட்ட பணம் பிடிக்கும். உங்கிட்ட சொல்ல வேணும்னு தான் இருந்தேன். சமையல் அறையிலே மூலையில் அடுப்பு மேடையிட்டே ஒடு பிரிஞ்சு ஒழுகுது. வீட்டைப் பழுது





# சாதாரண மனிதன்

'லக்ஷ்மி'

பார்க்கவும் கொட்டில் கட்டவும் பணத்துக்கு எங்கே போவோம்?'' திகைப்பும் துயரமுமாக ஜெகதா சந்தியாவைப் பார்த்தாள். எதற்கும் அஞ்சாத அத்தையின் கண்கள் இப்போது ஈரத்தில் பளபளத்தன.

அவன் வாக்குக் கொடுத்தபடி அன்று காலை காப்பி பலகாரம் சாப்பிட அவர்கள் வீட்டுக்கு வந்து விட்டான்.

பள்ளிக்கூடம் கிளம்ப ஆயத்தமாகிவிட்டிருந்த சந்தியாதான் கதவைத் திறந்தாள்.

அவன் முகமும் கண்களும் ஏன் இப்படிச் சிவந்து....?

''வாப்பா கட்டாரு.... சீக்கிரம் எல்லாத்தையும் மேஜையில் கொண்டு வைக்கிறேன். நீ ஆஸ்பத்திரிக்குப் போகணும். சந்தியா நேரத்தோட பள்ளிக்கூடத்துக்குப் போகணும்...'' என்ற அத்தை ஜகதாவின் முகம் கூடச் சாம்பியிருந்தது. காரணம்?

முற்றத்திலேயே கைகழுவக் குறட் டோரம் வந்து செம்பை எடுத்தான்.

''அம்மா....'' என்ற பசுவின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

சமையலறைக்கு எதிரே இருந்த விஸ்தாரமான தாழ்வாரத்தின் ஓரத்திலே ஜன்னல் கம்பியோடு மாடும் கன்றும் கட்டப்பட்டிருந்தன. கீழே பரத்திப் போட்டிருந்த வைக்கோல் மீது மாட்டின் சாணம். அவன் வந்திருப்பதை உணர்ந்து வராந்தா தூணில் பிணைக்கப்பட்டிருந்த லாம்சன் உரத்த குரல் எழுப்பிக் குரைக்கத் தொடங்கியது.

''இதென்ன மாடு கன்று எல்லாம் வீட்டுக்குள்ளேயே வந்து விட்டதுகளே? என்ன விஷயம்?'' என்று விசாரித்தபடி அவன் மேஜை அருகே வந்தான்.

''பலகாரம்சாப்பிட்டுட்டுக்கொஞ்சம் புழக்கடைப் பக்கம் வந்து பாருப்பா...'' என்றுள்

அத்தை. அப்போதுதான் கவனித்தான். கண்களில் பொங்கிய கண்ணீரைச் சட்டென்று சந்தியா புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டாள்.

''நேத்துப் பெய்த மழை உங்களுக்கு மிகவும் உபகாரமாக இருக்கும்னு சந்தோஷப் பட்டுக்கொண்டேன்'' என்றபடி பூப்போல மெத்தென்று சூடாகத் தட்டில் ஆவி பறந்த இட்டிலியை மெல்லப் பிட்டுச் சட்டினியில் தோய்த்து விழுங்கத் தொடங்கினான்.

''அப்படித்தான் நான் மழையைக் கண்டு மனம் பூரிச்சுப் போயிருந்தேன். ஆனால் இப்படி ஒரு நஷ்டம் வரும்னு நான் கனவு கூடக் காணலே. எல்லாம் எங்க போறாத வேளை.'' வருத்தம் நிறைந்த குரலில் மெல்லக் கூறியவாறு அருகில் காப்பி டம்ளரைக் கொண்டு வந்து வைத்தாள்.

''மிஸ் சந்தியா... நீங்க சாப்பிடலையா?'' என்றபோது அவள் கண்களில் மீண்டும் நீர் புரண்டது. ''காப்பி மட்டும் குடிச் சுட்டேன். பசியே இல்லே...'' என்று முனகினாள்.

இந்தப் பூடகமான நாடகத்தின் பொருள் புரியாதவனாக அவன் விரைவில் காப்பியைப் பருகிவிட்டு எழுந்து கையைக் கழுவிக் கொண்டான். சந்தியா நீட்டிய துண்டில் கையைத் துடைத்துக் கொண்டபடி மெல்லப் பின் பக்கம் சென்று தோட்டத்தை எட்டிப் பார்த்தவன் திடுக்கிட்டுப் போனான்.

மாட்டுக் கொட்டில் இடிந்து விழுந்து கிடந்தது. சந்தியா — அத்தை இருவரின் மனத் துயரின் காரணம் சட்டென்று விளங்கி விட்டது.

இந்த விலைவாசி காலத்தில் மீண்டும் ஓர் உறுதியான கல் கட்டிடமாகக் கொட்டகை எழுப்பப் பணம் அதிகமாகச் செலவாகுமே!

''அடப்பாவமே! மழை தோட்டத்துச் செடிகளுக்கு நன்மை செய்திருந்தாலும் உங்களுக்குப் பெருத்தநஷ்டத்தைக் கொடுத்து விட்டிருக்கே?...ஆனால் அதுக்காக நீங்க மாட்டையும் கன்றையும் உள்ளே வைத்துக் கொண்டு வாழ முடியாது. ஈயும் கொசுவும் உபத்திரவம் செய்யும். அவைகளால் என்ன நோய்கள் ஏற்படும்னு வாத்தியார் அம்மாவுக்கு நான் சொல்லியா தரணும்?'' லேசாகச் சிரித்தான். துயரத்திலே கலங்கி... சிவந்து.. சாம்பிவிட்டிருந்த அந்த அழகு முகத்திலே சிரிப்பின் ரேகையைக் காண விரும்பி அவளை அவன் பரிகாசமான பாவனையில் பார்த்து முறுவலித்தான்.

சந்தியா சிரிக்க முயன்றாள். ஆனால் மீண்டும் கண்கள் கலங்கிப் போயின.

''மிஸ் சந்தியா... இது மாதிரி எதிர் பாராத விதமாக ஏற்பட்ட நஷ்டத்தைக் கண்டு ஏன் இப்படிக் கலங்கிப் போறீங்க? மாட்டுக் கொட்டகையைப் புதுப்பிக்க என்ன செலவாகும்னு பூதலூரில் உள்ள எனக்குத் தெரிஞ்ச கட்டிடக் கண்டிராக்டர் ஒருத்தர் கிட்டக் கேட்டுச் சொல்றேன். அதுவரை கொஞ்சம் தைரியமாக இருங்கோ... நாம புறப்படலாமா?'' என்று ஆறுதலாகப் பேசி அவன் அத்தையிடம் விடைபெற்றுக் கொண்டு முன்னே நடந்தான். பின் தொடர்ந்து சந்தியா, தோள் பை, குடை, டிபன் டப்பா சகிதம் காரில் ஏறிக் கொண்டாள்.

கேட்டைச் சாத்திவிட்டு அவர்களுக்கு விடை கொடுத்த ஜகதாவின் மனத்தில் சிறிது நிம்மதி ஏற்பட்டது.

ஆனால் சந்தியாவின் மனத்திலோ இனம் விளங்காததொரு திகில் நெருப்பாக எரிந்தது.

அவர்கள் வசிப்பதோ ஒரு சிறிய கிராமம். காவேரிப்பாக்கத்தில் ஒரு காக்காய் சிறு கல்லைக் கொண்டு வந்து தெருவில் லொட்டென்று போட்டுவிட்டுப் பறந்துவிட்டாலும் போதும். சங்கதி கொல்லென்று ஊர் பூரா நிறைந்து விடும்....'வாத்தியார் ஐயா பெண் கல்யாணமாகாதவ... அந்த டாக்டர் பையனோட காரில... அவன் பக்கத்திலே உட்கார்ந்துக் கிட்டுப் போறதைப் பார்த்தேன்' என்று ஒருவன் சொன்னால் போதும். ஊர் முழுதும் தீயாகப் பரவி... அந்தச் சங்கதி பல உருவில் வெளியே உலாவத் தொடங்கிவிடுமே....?

முதல் நாள் கொட்டிய மழையில் அந்த இருட்டில் யாரும் அவள் காரில் அவனுடன் வீட்டுக்கு வந்ததைக் கவனித்திருக்க முடியாது. பளிச்சென்று வெயில் எரிக்கும் அன்று காலையில் தெருவில் போவோர் வருவோர் யாராவது பார்த்துவிட்டால்...

சாலை ஓரத்தில் அந்த ஆலமரத்தடியில்... ஐயோ.. இன்றைக்கு என்ன பஸ்ஸுக்கு அப்படி ஒரு கூட்டம்?

அதில் அவர்கள் குடும்பத்தைத் தெரிந்தவன் யாராவது இருந்து தொலைத்தால்?

அவனுக்குக் கிரிதரன் அருகில் அமர்ந்து காரில் பயணப்பட ஆசையாகத்தான் இருக்கிறது.

பின் ஏன் இந்தப் பாழும் குற்ற உணர்வு மனத்தைக் குடைகிறது?...

எதிர் எதிர்க் கட்சிகளில் வாதாடும் வக்கீல்கள் கத்தரிக்கோலின் இரு பக்கங்களைப் போன்றவர்கள். அவர்கள் ஒருவரை யொருவர் வெட்டிக் கொள்ள மாட்டார்கள். ஆனால் நடுவில் அகப் பட்டுக்கொண்டு தவிக்கும் இரண்டு பக்கக் கட்சிக்காரர்களை வெட்டி விடுவார்கள்.
—பெர்னார்ட்ஷா
கணியூர் பாருக்






விடுமுறையில்
ஒரு நாள்
பட்டம் பண்ணி
விடலாம்
அடுத்தநாள் அலுத்துப்
போகும்! ★

குடும்பத்தில் அனைவருக்கும்
படிக்கப்படிக்கச் சுவைகுன்றாத பக்கங்களைத் தருவது

# கல்கி விடுமுறை மலர் 1982

**320 பக்கங்கள் விலை ரூ. 6/-**

உங்கள் அபிமான எழுத்தாளர்கள், கவிஞர்கள், ஓவியர்கள் புகைப்பட நிபுணர்களின் ஒத்துழைப்புடன் உருவான வண்ணப் படைப்பு.

**மே 9உ கல்கி இதழுடன்** சேர்ந்து எல்லா கல்கி ஏஜெண்டுகளிடமும் கிடைக்கும்.

உடனே உங்கள் பிரதிக்குப் பதிவு செய்து கொள்ளவும். தபாலில் பெற விரும்பினால் பதிவு தபால் செலவு ரூ. 3/- சேர்த்து அனுப்பவும்.

**மானேஜர் • கல்கி • சென்னை-600 032.**

★ புகைப்படம் : எம். நடராஜன்

''என்ன யோசிக்கிறீங்க?'' கேட்டபடி கிரிதரன் வண்டியை வேகமாக ஓட்டினான்.

''வேறு ஒன்றும் இல்லை. இன்று நடத்த வேண்டிய பாடங்களைப் பற்றி யோசிச்சுக் கிட்டிருந்தேன்.''

''கவலைப்படாதீங்க... அந்த மாட்டுக் கொட்டிலைக் குறைந்த செலவில் எப்படிக் கட்டி முடிப்பது என்று நாம் தீர்மானிப்போம்... மறுபடி இன்னிக்கும் மாலே மழை பெய்யும்னு வானிலை அறிக்கை சொல்றது. அதனாலே இன்னிக்கும் நானே உங்களை வீட்டில் கொண்டு வந்து விட்டுட்டு மறு நாள் காலே பள்ளியில் சேர்த்து விடறேன். சம்மதமா?''

சரி என்று ஒப்புதல் கொடுக்கவும் முடியவில்லை. வேண்டாம் என்று விலகிக்கொள்ளவும் முடியவில்லை. நெஞ்சு கலவரமும் மகிழ்ச்சியுமான கலவை உணர்வில் தீவிரமாக அடித்துக் கொண்டது.

''மவுனமாக இருந்தால் சம்மதம் என்று தானே அர்த்தம்...'' சொல்லிவிட்டு அவன் உரக்கச் சிரித்தான்.

அந்தச் சிரிப்பு பேச்சு எல்லாம் அவளது காதுகளைப் பட்டுப் போல் மிகவும் இதமாகத் தழுவி உடம்பை இன்பச் சிலிர்ப்பில் நடுங்கச் செய்ததை உணர்ந்தாள்.

அவன் மேலே தொடர்ந்துபேசாது மௌனமாகத் துரிதமாக வண்டியை ஓட்டினான்.

பள்ளிக்கூடத்து வாசல் அருகே... சற்றுத் தொலைவிலேயே அவன் காரை நிறுத்த— அவள் அவசரமாக இறங்கிக் கொண்டாள்.

அன்று மாலையும் அவன் சொன்னதுபோல் பள்ளிக்கூடம் முடிந்து குழந்தைகள் வெளியேறிய பின்பு வானம் திடீரென்று கருத்துக் கொண்டு மின்னலும் இடியுமாக... மழை கொட்டத் தொடங்கி விட்டது.... உடைந்த கம்பியை அத்தை சரி செய்து வைத்திருந்த குடையைப் பிரித்துக்கொண்டு மெள்ள அவள் பள்ளிக்கூடத்தின் கேட் அருகே வருவதற்குள் வெளியே பாதை ஓரத்தை ஒட்டியபடி காரை நிறுத்திக் கொண்டு அவன் அவளுக்காகக் காத்திருந்தான். அன்றும் அவன் அவர்கள் வீட்டில் தான் சாப்பிட்டான். இளிவிக்கில் தூங்கினுல். கன்னென்று கொளுத்திக் கொண்டு புறப்பட்ட வெய்யிலில் அவள் பஸ்ஸில் போக அனுமதிக்காது தன் காரில் அவளை அழைத்துக் கொண்டு சென்றான்.

அதற்கடுத்த நாளும் இதே கதைதான்.

ஒரு வார காலம் மாலைப் பொழுதிலே மழையோ மழை என்று கொட்டித் தீர்த்த வானம் ஒரு வழியாக மீண்டும் சாதாரண நிலையை அடைந்தது. முன் போல கோடைச் சூரியன் கொளுத்திக் கொல்லா விட்டாலும் எங்கிருந்தோ வீசிய குளிர்ந்த காற்றில் வெப்பம் குறைந்து வெய்யில் இதமாகக் காய்ந்து கொண்டிருந்தது.

இனியும் தொடர்ந்து அவனுடன் காரில் பள்ளிக்கூடத்துக்குப் பயணப்படுவது வீண் அபவாதத்துக்கு இடம் என்று அவள் அஞ்சி ஒதுங்கினாள்.

ஆனால் அந்த அபவாதம் அவளைக் கண்டு அஞ்சி ஒதுங்கவில்லை.

அன்று காலை அவள் பஸ்ஸில்தான் புறப்பட்டுப் பள்ளிக்கூடத்துக்கு வந்திருந்தாள்.

உள்ளே நுழைந்து ஆசிரியைகளுக்கு என்று ஒதுக்கப்பட்டிருக்கும் அறைக்குள் தன் அலமாரியில் குறிப்புப் புத்தகங்களை வைத்துப் பூட்ட நெருங்கியபோது உள்ளே ஒரே சிரிப்பொலி... அவள் பெயர் அதில் அடிபட்டது. தயக்கத்தோடு அவள் வராந்தாவிலேயே நின்று கேட்டாள்.

''உண்மையாகவா சொல்றே? நம்ப முடியாது...'' என்று கிரீச்சிட்டது ஒரு குரல் உள்ளே.

''என் கண்களால் பார்த்ததைச் சொல்றேன். கதை கட்டவில்லை...''

''சந்தியா அடக்கமான பெண் என்று பிரசித்த மாச்சே...''

''உனக்குத் தெரியாதா இந்தப் பழமொழி 'தூங்கும் பூனைக்குட்டிதான் பால் சட்டியை உடைக்கும்'! ஐயோ — பாவம்னு பார்த்தவங்க மனத்தைக் கனிய வைக்கும் ஒரு பரிதாபக் கலையை மூஞ்சியில் வச்சுக்கொண்டு அவள் செய்ற காரியம் நம்மை ஒத்த பெண்களுக்கு அடுக்கவே அடுக்காது. அன்னிக்கு அந்தப் பெண் ராதிகா மயக்கம் போட்டு விழுந்தப்போ மருந்துப் பையோட ஓடி வந்தானே அந்த டாக்டர்.. அன்னிக்கே ஆரம்பிச்ச காதல் நாடகம் இது. இத்தனை நாளும் நமக்குத் தெரியாதிருந்தது. இப்போ பலர் பார்த்தாச்சு...''

''அப்படி நீ என்னதான் பார்த்துட்டே.... விளக்கமாச் சொல்லித் தொலையேன்....''

''அவனுடைய காரில்தான் அம்மா தினசரி பள்ளிக்கூடம் வந்துண்டுபோயிண்டு இருக்கா. ராத்திரிக்கு அவனுக்கு அவள் வீட்டிலேதான் சாப்பாடாம்....''

''படுக்கை கூடஅங்கேதான்னு சொல்லு... அவங்களைத் தட்டிக் கேட்க அங்கே யார்.. அந்த வீடு ஒரு அல்லி ராஜ்யம்... இஷ்டப்

சினிமாத் தியேட்டரில் டிக்கட் கவுண்டரில் இருப்பவரிடம் ஒருவர் தனது இரு குழந்தைகளையும் சுட்டிக்காட்டி, ''இந்தக் குழந்தைகளுக்கு டிக்கட் வாங்கணுமாங்க?'' என்றார்.

கவுண்டரில் இருப்பவர் : தேவை இல்லீங்க

முதல்வர்: அப்ப இவங்களே மட்டும் அனுப்பறேன். நான் ஏற்கனவே இந்தப் படம் பார்த்தாச்சு...!

-சுந்தரம்



படி கொட்டமடிக்கத் தகுந்தாப்பல பெரிய தோட்டத்துக்குள்ளே.... ஊருக்கு ஒதுக்குப் புறமா....''

'திக் திக்' என்று நெஞ்சு அடித்துக்கொள்ள உடல் முழுதும் நெருப்பாக ஆத்திர உணர்ச்சி எரிய... சந்தியா பலமாகக் காலணியைச் சப்திக்கச் செய்த வண்ணம் தொண்டையைச் செருமிக்கொண்டு அந்த அறைக்குள் நுழைந்தாள்.

பத்ரகாளி போன்ற பயங்கரம் நிறைந்த முகத்தோடு அவள் வெறித்த பார்வையில் அவர்களது வம்பு அப்படியே கப்பென்று அடங்கிப் போனது. ஆனாலும் அவளுக்கு அழுகையும் துக்கமும் அடிவயிற்றினின்றும் புரண்டு நெஞ்சை அடைத்துக் கொண்டது.

அவள் கிரிதரனை விரும்புகிறாள். அவன் அவளை விரும்புகிறான் — அந்த ஒரு காரணத்துக்காக அவளுக்கிரங்கி அவள் மழையில் நனையக் கூடாது என்று பாதுகாப்பு உணர்வுடன் அவளைத் தன் காரில் ஏற்றிக்கொண்டு வீட்டில் சேர்த்தான். இப்படிச் சில நாட்கள் மழை காரணமாக அவன் உதவினான். அவள் ஆசையுடன் அவன் உதவியைப் பெற்றுக் கொண்டாள்.

இவர்கள் ஏன் அதைக் கண்டு பொறாமைப் படவேண்டும்? இல்லாத கதைகளைக் கற்பிக்க வேண்டும்? இவர்கள் எல்லாம் ஆசிரியைகளா... இந்தக் குறுகிய புத்திக்காரர்கள் வம்புக்காரிகள் — போதிக்கும் கல்வியைப் பெற்று வருங்காலப் பெண் சமுதாயம் உருப்பட்டாற்போலத்தான்....அவளுக்குக்கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

'நான்டாக்டர் கிரிதரனைக் காதலிக்கிறேன். உங்களுக்கு அதனால் ஆகவேண்டியது என்ன?'

—கத்திக் கூச்சலிட வேண்டும் போன்ற ஆத்திரத்தில் குறிப்புப் புத்தகங்களை அலமாரிக்குள் பொத்தென்று போட்டு அத்தனை பேர் முகத்திலும் ஓங்கி அறைவது போல் அலமாரிக் கதவை ஓங்கிச் சாத்திப் பூட்டிவிட்டு விடுவிடுவென்று வெளியேறினாள்.

அன்று மாலை வீடு திரும்பியவளுக்கு அதிர்ச்சியானதொரு சங்கதி காத்துக்கொண்டிருந்தது.

காலையிலிருந்து வைக்கோல் தின்றது தீனியை முகர்ந்துகூடப் பார்க்காது படுப்பதும் எழுந்திருப்பதுமாக அமைதியில்லாது தவித்த செல்லக்குட்டி பல தடவை சாணம் கழிந்து.. பின்னர் ரத்தமாகக் கழிந்து...மயங்கி விழுந்து அத்தை கால்நடை மருத்துவரைக் கூப்பிட்டனுப்பு முன் இறந்து போய் விட்டது.

வைக்கோல் பரத்தலின் மீது வேப்பமரத் தடியில் கண்களைத் திறந்த நிலையில் கால்களைப் பரப்பி நீட்டிக் கொண்டு ஒருக்களித்த படி உயிரற்றதாகக் கிடந்த தன் அருமைப் பசுமாட்டைப் பார்த்த சந்தியா... குனிந்து மெல்ல அதன் முகத்தைத் தடவிக்கொடுத்து விட்டு 'ஹோ' வென்று அழுதாள்.

''அத்தை... என் செல்லக்குட்டி என்கிட்டயிருந்து போயிட்டாளே அத்தை'' என்று அலறி அழுத அவளைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டாள் ஜகதா.

''சந்தியா... நாம செய்ய இனி ஒண்ணுமில்லே... மாரப்பனை வரச் சொல்லியிருக்கேன்... அவன் வந்து ஆகவேண்டியதைச் செய்து முடிப்பான். நீ உள்ளே வாம்மா'' என்று தழுதழுத்தாள். (தொடரும்)

---

## ஆன்றோர் வாக்கு

கோவிலுக்குப் போகிறது. கோவிலிலுள்ள ஸ்வாமியைத் தரிசனம் பண்ணுகிறது. அந்தச் ஸ்வாமியையே தியானம் பண்ணுவது என்று இப்படிச் செய்துவந்தால், இப்படிப் பக்தி செய்து வந்தால் உண்மையான பக்தி உண்டாகி விடுகிறது. இந்த உண்மையான பக்தி வந்தவுடன் 'பகவான் கோவிலில் மட்டும் இல்லை, அவர் இல்லாத இடமே இல்லை. அவர் ஸர்வாத்மனாக இருக்கிறார். எல்லாவற்றிலும் ஸர்வாந்தர்யாமியாக இருக்கிறார்' என்கிற இப்படிப்பட்ட உண்மையான ஸ்வரூபத்தைப் பகவான் எப்பேர்ப்பட்டவன் எத்தகையவன் என்கிற தத்துவ தரிசனத்தை அடைகிறான்.

-ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்



வாழ்க்கையைக் கலையாகப் பயன்படுத்துவதற்கு அறிவுதான் கருவி. ஆனால் இயற்கை அறிவைக் கொண்டே எல்லாரும் இந்தப் பயனை அடைய முடியாது. வாழ்க்கையில் எவற்றை விலக்க வேண்டும், கையாள வேண்டும் எவ்வகையில் கையாளவேண்டும் என்றெல்லாம் எடுத்துச் சொல்ல ஒரு வழிகாட்டி வேண்டும். வாழ்க்கையின் வழி நுட்பங்களை அறிந்த பெரியோர் உலகத்துக்குத் தந்த நூல்களே இவ்வழிகாட்டிகளில் சிறந்தவை.

—ஆர்.கே. சண்முகம் செட்டியார்

எவ்வுயிரிடத்தும் அன்பாய் இரு. அன்பே உயிரின் இயல்பு. எல்லாரிடத்திலும் அன்புடன் பழகு. நீயும் வாழ். பிறரையும் வாழவிடு.

—மஹாவீரர்

நாவை விட அதிக விசேடமானதாக மனிதனுக்கு இறைவன் எதையும் அமைக்கவில்லை. சுவனத்தை அடைவதும் நாவைக் கொண்டுதான். நரகத்தை அடைவதும் அதைக் கொண்டுதான். நாக்கு பொல்லாத கடிநாய் போன்றது. அதை அடக்கியாள வேண்டும்.

நபிகள் நாயகம்

# அம்மாவுக்கு அப்புறம் கடல்தான்!

"இப்போதைக்கு எனக்கு அம்மா, அப்பா உற்றார், உறவினர்எல்லாமே கப்பலும் கடலும்தான்! இந்த வாழ்க்கையே முழுக்க முழுக்க வித்தியாசமானது. வேலை நேரம் என்றோ, விடுமுறை என்றோ ஒன்றும் கிடையாது. கடலில் போய்க் கொண்டிருக்க வேண்டும். தரையை நாங்கள் பார்க்கும்போதெல்லாம் எங்களுக்குப் புதிய புதிய அனுபவங்கள் தான்!''

என்று தான் பார்க்கும் வேலையைப் பற்றி ரசித்துச் சொல்கிறார் திரு திலீப் சீனிவாஸ். இவர் சரக்குக் கப்பற் பகுதியின் (Cargo ship) உயர் அதிகாரி. பதினாறு-வயதிலேயே இந்தப் பணிக்கு வந்துவிட்ட அவர், 'இந்த இருபத்தி நான்கு வயதுக்குள் பெற்றுவிட்ட அனுபவங்கள் ஏராளம்' என்கிறார்.

''கடலில் நாங்கள் போய்க் கொண்டிருக்கும்போது கிடைக்கும் அனுபவங்கள், எழும் பிரச்னைகள் ஒரு மாதிரி இருக்கும். அதே போல நாங்கள் சேரும் கரைகளிலும் பல பிரச்னைகளைச் சந்திக்கிறோம்.

கப்பலில் போகும்போது நாங்கள் நடுங்குவது புயலையும், சுறா மீன்களையும் கண்டு தான். 'ஜாஸ்' படம் பார்த்தவர்களுக்கு அதன் பயங்கரம் தெரிந்திருக்குமே!

ஒருமுறை ஜப்பானுக்குப் போய்க் கொண்டிருந்தோம். நல்ல பின்னையாக வீசிக் கொண்டிருந்த காற்று திடீரென்று வலுக்க ஆரம்பித்துவிட்டது.சாதாரணமாக இரண்டு அடி முதல் ஐந்து அடி-வரை அலைகள் எழும்பும். இப்போது 120 அடிக்கு அலைகள் சீற்றத்துடன் கிளம்பியது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

எங்களுக்கெல்லாம் ஜலசமாதிதான் என்று முடிவெடுத்து விட்டோம். ஒரு சுழலில் வேறு சிக்கிக் கொண்ட கப்பலுக்கு இனி கதிமோட்சம் ஏது? மேஜை நாற்காலி எல்லாம் 'தடால் தடால்' என்று விழுந்தன. மனிதர்களாலேயே நிற்க முடியவில்லை.

அழுகைக்கும், கூக்குரல்களுக்கும் நடுவே, மன நடுக்கத்தை வெளிக் காட்டாமல் எங்களால் முடிந்ததைச் செய்ய முயன்றோம். என்ன செய்வது? காளியின் ஊழிக் கூத்தைச் சின்ன எறும்பு நிறுத்த முடியுமா? முடிவில் இயற்கை அன்னையே எங்களைக் காப்பாற்றினாள். ஒரு பெரிய காற்று எங்கள் கப்பலை 'அலாக்கா'கச் சுழலிலிருந்து தூக்கி வீசி எறிந்தது. தலை தப்பியது தம்பிரான் புண்ணியம் என்று ஜப்பானுக்கு ஓடிப்போய்விட்டோம்.

வான்குவர் கடற் கரையில் இருந்தபோது, மீன் பிடி படகினர் எங்கள் கப்பலருகே வந்து மீன் பிடித்துக் கொண்டிருந்தார்கள். வலை வீசிக் கொண்டிருந்தவர் கையில்ஏதோ காயம் இருந்திருக்கிறது.

ரத்தத்தின் வாடையை முகர்ந்துவிட்டால் சுறா மீன்களின் பாடு கொண்டாட்டம்தான். எங்கேயோ இருந்த சுறா மீன் இங்கே வந்து விட்டது. அதற்கு மொத்தம் நானூறு பற்கள். இந்தப் படகில் இருப்பவர்கள் எம்மாத்திரம்!

கடைசியில், வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த நாங்களும் யுத்தத்தில் கலந்து கொண்டு ஒரு வழியாக அதைக் கொன்றோம். அன்றைக்கு நூறு பேருக்கு மேல் 'சுறா சூப்' சாப்பிட்டார்கள்.

ஜப்பானியரின் நேர்மையையும் உழைப்பையும் உலகம் எங்கும் தேடினாலும் கிடைக்காது. நாங்கள் போனபோது அவர்கள் வேலைநிறுத்தம் செய்து கொண்டிருந்தார்கள். எப்படி?

மூன்று மாதத்துக்கு ஒரு கப்பல் என்று சாதாரணமாகத் தயார் செய்வார்கள். அரசாங்கமும் அப்பொழுதுதான் விற்க முடியும். வேலை நிறுத்தத்தின்போது மாதத்துக்கு ஒரு கப்பலை முடிக்க ஆரம்பித்தார்கள். அரசாங்கம் திண்டாடிப் போய்ச் சரணடைந்தது. நம் நாட்டு வேலை நிறுத்தத்தை நினைக்கும்போது.....!

நான் ஏற்றுக் கொண்டிருப்பது ஒரு வேலையே அல்ல! ஒரு வாழ்க்கையே. நான் அந்த வாழ்க்கையை உணர்ந்து சுவைத்துக் கொண்டிருக்கிறேன்! அதன் இனிமை மாறாது என்று நினைக்கிறேன்.

பேட்டி: 'சிக்கி'



● சொல்ல வந்த விஷயத்தை 'நறுக்' கென்று தமக்கே உரிய பாணியில் 'ஒளி'யில் சொல்லியிருக்கிறார் ஜெயந்தன்.

ஸ்ரீரங்கம் எஸ். கிருஷ்ணன்

● "ஒளி" ஜெயந்தனின் மாஸ்டர் பீஸ் என்று நிச்சயமாகச் சொல்லலாம்.

பெங்களூர் ப. மூர்த்தி

● ஜெயந்தனின் "ஒளி" புதுமையான கதை; புதுமையான நடை. ஆனால் உப்புச் சப்பில்லாத முடிவு.

கோயம்பத்தூர் வனலட்சுமி கங்காராம்

● கடந்த பதினான்கு வாரங்கள் திரு ஜெயந்தன் அவர்களின் கற்பனைத் திறனுக்குப் பின்னாலேயே எங்களையும் இழுத்துக் கொண்டு சென்றீர்கள். மர்மக் கதைகளுக்கும், பாசக் கதைகளுக்கும் காதல் கதைகளுக்கும் சவாலாக அமையும் படியாக "ஒளி" என்ற அழகான, அற்புதமான கருத்துச் செறிவுடன் கூடிய நாவலை எங்களுக்கு வழங்கிய கல்கியே உன் சேவை தொடரட்டும்.

கும்பகோணம் திருமதி பிரசன்னராஜன்

● திரு ஜெயந்தன் அவர்களின் ஒளி ஒரு புரட்சிகரமான நாவலாக அமைந்துவிட்டது.




இங்கிருக்கும் அனைத்து வாசகர்களாலும் ஒளி பாராட்டப்படுகிறது. ஜெயந்தனின் 'ஒளி' யில் வந்த பாத்திரப் படைப்புக்கள் அத்தனையும் முழுமை பெற்று விளங்கின.

குறிஞ்சிப்பாடி குறிஞ்சி வேலன்

## அட்டைப் படப் புதிர்!

மார்க்ஸ் பிரதர்ஸ் மூவர். அந்நாளைய ஆங்கில சிரிப்பு நடிகர்கள். ஒருவருக்கொருவர் சதா இடைஞ்சல் பண்ணிக் கொண்டும் சண்டை போட்டுக் கொண்டும் இருப்பார்கள். இருந்தாலும் அவர்கள் நட்பு ஒவ்வொரு படத்திலும் தொடரும்!

இவ்வார அட்டைப்பட அழகிகள் மூவரும் அப்படியல்ல. நெருங்கிய நண்பர்கள். மனமொத்த சிநேகிதிகள். மனப்பொருத்தம்தான் அப்படியென்றால் பெயர்ப் பொருத்தம் கூடவா? நம்பமாட்டீர்கள்! மூவருக்கும் ஆரம்ப எழுத்து க. இரண்டெழுத்து, மூன்றெழுத்து, நான்கெழுத்துப் பெயர்கள்! ஒவ்வொருக்கொன்று அனுசரணையான அர்த்தங்களைக் கொண்டவை. எங்கே கண்டுபிடித்து எழுதுங்கள் பார்க்கலாம்!

1 க —; 2 க — —; 3 க — — —

விடை 52ம் பக்கம்.

வண்ணப்படம்: சரஸ்வதி சத்தியமூர்த்தி



## 3

'வாழ்க்கை என்பது இன்னதுதான் என்று உறுதியாக, ஒரு தெளிவோடு அதைப் புரிந்து கொண்டு விடுவது என்பது எத்தனை பேருக்குச் சாத்தியமாகிறது? உண்ணலும், உடுத்தலும், உறங்குதலும், இனப் பெருக்கமும் வாழ்க்கையில் ஏற்படுகிற நியதிகளாகிவிடுகின்றன. வெறும் உயிர் வாழ்தல் மட்டுமே வாழ்வது என்று சொன்னால் அதுவும் வாழ்க்கைதான். விலங்கினங்களினின்றும் எந்த விதத்திலும் மேம்பட்டதாக இல்லாத ஒருநிலை. மனிதப் பிறவிக்கு ஒரு 'பர்பஸ்' இருக்க வேண்டும். 'மனிதனும் விலங்கைப் போன்று வாழ்வது கேவலம்' ராஜாமணி தன் டயரியில் எழுதிக் கொண்டிருந்தான்.

நடுத்தரமான உயரம், சிவந்த மேனி, சுருட்டைத் தலை. அகன்ற நெற்றி. தேகப் பயிற்சிகள் செய்து வந்ததால் அமைந்து விட்ட கட்டுடல். கம்பீரமான குரல். பெரிய, ஆளை ஊடுருவிப் பார்க்கும் விழிகள். நிமிர்ந்த நடை. இதுதான் ராஜாமணி. தான் சில தினங்களுக்கு முன்னால் முரளியிடம் காதலைப் பற்றிப் பேசியதும், பெண்மையைப் பற்றிப் பேசியதும் அவன் மனத்தில் நினைவோடின. ஆனால் தன்னுடைய வாழ்க்கையிலேயே ஒரு பெண் மிகத் தீவிரமான அன்புடன் குறுக்கிடுவாள் என்பதை அவன் எதிர்பார்க்கவில்லைதான். அன்று முன் தினம் காரியாலயம் முடிய அரை மணி நேரத்துக்கு முன்னால் சித்ரலேகா அவனிடம் பேசியது தன்னுள் ஒரு பாதிப்பை ஏற்படுத்தி விட்டதைப் போல உணர்ந்தான். தன்னுடைய பிரம்மச்சரிய லட்சியத்தை அவள் சவால் விட்டுத் தகர்ப்பது போல் தோன்றியது.

வெறும் இனக் கவர்ச்சியைக் காட்டி அவள் தன்னை ஈர்க்கவில்லை யென்பது அவனுக்குத் தெரிந்தது. செக்ஸ் உணர்வுக்குப் பலியாகிவிடும் சாதாரண சராசரி ஆடவன் அல்ல அவன் என்பது அவளுக்குத் தெரிந்தது போல் பேசினாள். அறிவார்ந்த பார்வைகளும், தீர்க்கமான, தெளிவான பார்வைகளும் அவனுக்கு உண்டு என்பது அந்தக் காரியாலயத்தில் வேலை பார்த்த பெண்களுக்குத் தெரியும். கேலியாக அவனுடைய நண்பர்கள் அவனைச் சாமியார் என்று பெயரிட்டு அழைத்தது அங்கே பிரசித்தம். சில நேரங்களில் அவன் காது படவே பேசிக்கொள்வார்கள். அவன் எதையுமே லட்சியம் செய்தது கிடையாது. தங்களால் கட்டிக் காக்க முடியாத ஒரு நிலையை மற்றவன் ஒருவன் காத்து இருப்பது அவர்களிடையே ஒருதாழ்வுணர்ச்சியை உண்டாக்கி விட்டது போல் அவன் உணர்ந்தான். அதில் தனக்குப் பெருமைகொள்ள இடமில்லையென உணர்ந்தாலும் அகங்காரத்தை வளர்த்துக் கொள்வதை அவன் வெறுத்ததாலும் எதையுமே அவன் சாதாரணமாக எடுத்துக் கொண்டான்.

ஆனால் சித்ரலேகாவின் பேச்சுக்களை அவனால் அப்படி அந்நியப்படுத்தி, ஒதுக்கிவிட முடியவில்லை.

''நல்லது, கெட்டது என்று சொல்கிறோமே அதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் ஸார்?' — சித்ரலேகா கேட்டாள்.

''அவைகள் சார்பு வார்த்தைகள். எது நல்லது, எது கெட்டது என்பது செய்யப்பட்டுவிட்ட செயலின் பின்புலத்தையும், செய்த நபரையும் வைத்துப் புரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள். மேலெழுந்தவாரியாகப் பார்க்காமல் தீவிரமாக உற்றுப் பார்த்தால் நல்லது கெட்டது என்பது இப்படித்தான் என்று என் மனத்தில் படுகின்றது!'' என்று அவன் சொன்னான்.

''ரியலி!'' அவள் கண்கள் அகல விரிந்தன.

''பொதுவாக நம்முடைய செய்கைகள் மற்றவர்களுக்கு ஊறு விளைவிக்காமல் இருப்பதே நல்லது. ஆனால் தண்டிக்கப்பட வேண்டிய அளவுக்கு ஒருவன் காரியம் செய்தால் அதைச் சும்மாவிட்டுவிட முடியாது. சமுதாய வாழ்க்கையே எழுதிக் கையெழுத்திடாத ஓர் ஒப்பந்தம் தானே.



# கவர்ச்சிகள்

கிருஷ்ணமணி

அந்த ஒப்பந்தம் சராசரி வாழ்க்கைக்குத் தேவையாகிறது. அதை அடிப்படையாக வைத்துத்தான் நாம் நல்லது கெட்டதுகளை நிர்ணயிக்கிறோம்.''

''வொண்டர்புல்! ஸார், உங்க பேச்சு எனக்குப் பிடிச்சிருக்கு. நீங்க நிறையப் படிக்கிறீங்க போலிருக்கு!''

அவளுடைய பேச்சைக் கேட்டு அவன் புன்னகைத்தான். அவளையே உற்று நோக்கினான். மாநிறம். நீண்ட முகம். அதில் பார்த்தவுடன் ஆளைக் கவர்ந்திழுக்கும் அழகு சிறிதும் இல்லை. ஆனால் அமைதியாக இருந்தது. பெண்களுக்குச் சாதாரணமாக இருப்பதைக் காட்டிலும் சற்று அகலமாக அமைந்துவிட்ட நெற்றி. கிராமத்துக் குடியானவப் பெண்ணைப் போல, பட்டணத்து நாகரிகம் பாதிக்காத, எளிமை கலந்த ஒரு மென்மையோடு அவள் இருந்தாள். கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றவளாக அவளைக் கண்ட மாத்திரத்தில் சொல்ல முடியாது. ஆனால் புத்தி சாதுரியம் மிக்கவள் என்பது பார்வையிலேயே தெரிந்தது. இலாகாவின் தேர்வுகளில் அவள் தேர்ச்சி பெற்றிருந்தாள். இன்னும் சில வாரங்களில் அவளுக்குப் பதவி உயர்வு வந்து விடும். காரியாலய வேலையிலும் அவள் சாமர்த்தியசாலி என்று பெயர் பெற்றிருந்தாள்.

''என்ன ஸார், நிலைகுத்தாமப் பார்க்கறீங்க?''

''ஒண்ணுமில்லே!''

''என் கேள்விக்குப் பதில் சொல்லலியே!''

''ஓ! அதுவா நான் நிறைய சிந்திக்கிறேன்!''

''நீங்க நிறையப் படிக்கிறாப் போல இருக்கு?'' அவன் கேட்டான்.

''பொழுது போகணுமே ஸார்! நிறைய ஐடியாக்கள் தெரியறது!''

''மத்தவங்களுடைய அபிப்ராயங்கள்தாம் நாம் படிக்கறதெல்லாம். என்னைப்பொறுத்த வரைக்கும்நாம ஒவ்வொருத்தரும் அநேகமா—மெஜாரிட்டியைச் சொல்றேன். மத்தவங்களுடைய அபிப்பிராயத்துக்காகப் பல காரியங்களைச் செய்யறோம். நமக்குச் சரின்னு படற எத்தனையோ விஷயங்களைக் கூட நாம ஒதுக்கித் தள்ளிடறோம். இதுகூட ஒரு மாதிரியான இன்ஹிபிஷன்தான்!''

''நீங்க மத்தவங்களைப் பத்தி அக்கறைப் படறதில்லையா?''

''என் போக்கை நிர்ணயிக்கிறது நானாகத் தான் இருக்கணும்னு நினைக்கிறேன். என்னை நீங்க எப்படி வேணும்னாலும் புரிஞ்சுக்கலாம். அதை நான் நிச்சயமாத் தடுக்க முடியாது. அதனாலே நான் அதைப் பத்திக் கவலைப் படறதும் கிடையாது. சர்வ சுதந்திரமா செயல்படணும்னு நினைக்கிறேன். என்னுடைய இந்தப் போக்கு மத்தவங்களைப் பாதிக்காதபடி பார்த்துக்கறேன்.''

அவள் சிரித்தாள், பின்னர் தொடர்ந்து பேசினாள்.

''இதை ஒரு சோஷியல் இன்டிஃபரன்ஸ்னு சொல்லலாமா? இதுக்கு அடிப்படையா மனசில ஏதோ ஓர் எண்ணம் அழுத்தமா ஊறிப்போயிருக்குதுன்னு நான் சொல்றேன். சமுதாய வாழ்க்கைன்னு வர்றப்போ நம்மைச் சுத்தி இருக்கவங்களோட அபிப்பிராயமும் அதிலே கலந்துதான் இருக்கு இல்லையா? அப்படி இருக்கச்சே அதைச் சற்றும் பொருட்படுத்தாம இருக்கேன் கிறது கூட ஒரு 'அர்ரகன்ஸ்'... இல்லே ஒரு ஈகோ....' இப்படித்தான் சொல்ல வேண்டியிருக்கு. தன்னைப்பத்தியே மட்டும் நினைச்சிக்கிட்டிருக்கவா



னுக்கு இந்த மாதிரி மனநிலை ஏற்படறது சகஜம்தான். ஆனா எந்த மனுஷனும் தன்னை ஒரு தீவுத் திடலா மாத்திண்டு வாழறதினாலே என்ன லாபம்? மனசளவிலே கூட மத்தவாளோட கலக்க விரும்பாத ஒருத்தனைச் சமுதாயமும் புறக்கணிச்சிடும்.''

''ஐ டோன்ட் கேர் அபௌட் இட்!''

''கோபம் வந்திட்டதா? ஐம் ஸாரி!''

''கோபமில்லே, நான் எப்படி இருக்கணும்கிறது என் சொந்த விஷயம். இதிலே மத்தவாளோட குறுக்கீடு தேவையில்லேங்கிறதுதான் பாயிண்ட்!'' அவன் தன் கீழுதட்டை நாவால் தடவிக் கொண்டான்.

அவளுக்குத் தயக்கமாக இருந்தது. தான் அவனுடைய மனம் நோகும்படி பேசிவிட்டோமோ என்றுகூடத் தோன்றியது. பேச்சு தடைப்பட்டுப் போனது போல் உணர்ந்தாள். மேலும் அவனுடன் பேச வேண்டும் போலத் தோன்றியது.

''நீங்க ஏன் ஸார் டிபார்ட்மென்டல் பரீட்சை எழுதல்லே?''

''எனக்கு இஷ்டம் இல்லே. உயிர் வாழறதுக்குப் பணம் தேவைப்படறது. அதுக்காகத்தான் உத்தியோகம் பார்க்கிறேன். மேலும் என்னை நான் ஒரு முழு நேர குமாஸ்தாவாக எண்ணிப் பார்க்கிறதேயில்லே. இந்த வேலே நேரம் கழிஞ்சா, நான் இதுக்கு அந்நியமா போயிடறேன். பரீட்சை எழுதிப் பாஸ் பண்ணி சூப்ரெண்டா வந்தால் இன்வால்வ்மெண்ட் அதிகமாயிடும். அதனால்தான்!''

'கேரியர்னு ஒரு துறையை எடுத்துண்ட பிறகு அதிலே முன்னேற வேண்டாமா?''

''நான் கேரியரிஸ்ட் இல்லே! உங்களை மாதிரி ஜாப் ஓரியண்டடா இருக்க என்னால முடியல்லே!''

அவன் இப்படிச் சொன்னது அவளுக்குச் சற்றுக் கோபமூட்டியது. ''ஆமாம் ஸார்! என்ன பண்றது? எனக்கெல்லாம் ஆபீஸ்தான் எல்லாம். இந்தச் சின்ன வட்டத்துக்குள்ளே .முக்கியமான ஆளாக இருக்க நான் நினைக்கிறேன். வாழ்க்கையிலே என்னுடைய ஆசைகள் குறைவு. எது நிறைவேறுமோ அது மேலேதான் நான் ஆசைப்படறேன். எட்டாத தூரத்திலே இருக்கிற நிலாவைப் பிடிக்க ஆசைப்படறதை விட கிட்டத்திலே இருக்கிற ரோஜாப் பூ மேலே ஆசைப்படறது தப்பில்லேயே!''

''ரொம்ப பிராக்டிகல் நீங்க? நான் கனவுகளிலே வாழறவன். லட்சியங்களே என் கனவுகள். அவைகளை மனசிலே அசை போடறதிலே எனக்குச் சுகம் இருக்கு!''

'நேர் மாறானவ நான். நான் நிகழ்காலத்தைப் பத்தித்தான் நினைக்கிறேன். எதிர்காலத்தைப் பத்தின ஐடியா எனக்கு இல்லே.''

இப்பொழுது மீண்டும் அவளைப் பார்த்தான்.

''ஐ லைக் யூ சித்ரா!''

''என்னது? நீங்களா? யூ மீன் இட்!''

''யெஸ்!''

''கூடாது. நாம ரெண்டு பேருமே உணர்ச்சி வயப்பட்டவங்க. எமோஷனலா இருக்கிற ரெண்டு பேர் நெருக்கமா வரக் கூடாது!''

''ரொம்பச் சரி! நான் விலகியே நிக்கறேன். உங்க அருகிலேயே வரல்லே!''

இப்பொழுது அவள் சங்கடப்படுவது அவனுக்குத் தெரிந்தது. அவன் இப்படிச் சொல்லுவான் என்று அவள் எதிர்பார்க்காதது போலிருந்தது.

சிரித்துவிட்டுச் சொன்னான்: ''யார் யாரை இப்படித்தான் இருக்கணும்னு சொல்ல முடியும்? நீங்க என்னை விரும்பறதை என்னால எப்படித் தடுக்க முடியும்?''

''ஏன் என்கிட்டப் பேசாம இருக்கலாமே?''

அதனாலே தவிர்க்கலாம். ஆனா உங்க மனசோட எண்ணங்களுக்குத் தடை போட முடியுமா?''

''யூ ஆர். ரியலி இன்டலிஜெண்ட்சித்ரா!''

''தாங்க்ஸ்!''

''ஆக மனசளவிலே நான் உங்களை விரும்பறதும் நீங்க தடுக்க முடியாம இருக்கிறதுங்கூட ஒரு கற்பனைதானே? பரீட்சை பாஸ் பண்ணினால் பிரமோஷன் வரும்கிறதும்கூட எதிர்காலத்திலே யதார்த்தமான நிகழ்ச்சியா இருக்கப் போறதுதான் என்றாலும் அது வரைக்கும் அதுவும் கற்பனைதானே?''

''உம்! ஓரளவுக்கு அப்படித்தான்.''

''ஆக நாம் ஒவ்வொருத்தருமே வாழறதுக்குக் கற்பனைங்கிறது அவசியமாயிடுது.''

''யெஸ்! ஓரளவுக்குத்தான்.''

''அப்படி வாங்க! அது என்னைப் போல ஆட்களிடத்திலே சற்று அதிகமா இருக்கு. சொல்லப்போனா விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுக்கும், சமுதாய மாற்றங்களுக்கும்கூட சிந்தனையாளர்களோட கற்பனைதான் அடிப்படையா இருந்திருக்கு. இருக்கவும் செய்யுது. ஸோ!....''

''பேசுங்க ஸார்! நிறுத்தாமப் பேசுங்க!''

''இல்லே, நிறுத்தித்தான் தீரணும். உங்களை ஆபீஸர் கூப்பிடறார்னு ப்யூன் பிரகாஷ் சைகை காட்டறான். போயிட்டு வாங்க'' அவள் எழுந்து சென்றாள்.



குழந்தைக்கு மிகவும் சிறந்தது தாய்ப்பால்.

# நீங்கள் புட்டிப்பால் கொடுக்கும் அவசியம் நேரும்போது <u>கவனமாய்</u> இருங்கள்.

## கீழ்க்காணும் 5 முக்கியமான குறிப்புகளைப் பின்பற்றுங்கள்...

**1.** தொற்று கிருமிகளைத் தவிர்த்திடும் வகையில் பீடிங் பாட்டில், நிப்பிள், மற்றய பாத்திரங்கள் ஆகியவற்றை நன்கு சுத்தம் செய்து நீரிலிட்டுக் கொதிக்கச் செய்யவும். இல்லையெனில் பாலில் எளிதில் கிருமிகள் தோன்றிவிடும்.

**2.** நீரை பத்து நிமிடம் கொதிக்க வைத்து, உடல் வெப்பத்தைவிட சிறிது அதிகமாகவே ஆற வைத்த பின் பால் பவுடரைக் கலக்கவும்.

**3.** அதிக நீரை கலந்திடாதீர்கள், அதனால் சத்து குறைந்து விடலாம். டின்னின் மேல் கொடுத்துள்ள பால் புகட்டும் அட்டவணையைப் பின்பற்றவும்.

**4.** ஒவ்வொரு முறையும் குழந்தைக்குப் புதிதாக பாலைத் தயாரிக்கவும். மீந்துவிட்ட பாலை குழந்தைக்கு கொடுக்காதீர்கள், அதில் கிருமிகள் தோன்றி கெட்டுவிடுகிறது.

**5.** டின்னின் மேல் கொடுத்துள்ள எல்லா விதிமுறைகளையும் பின்பற்றவும். ஏதாவது சந்தேகம் இருப்பின் டாக்டரிடம் ஆலோசனை கேட்கவும்.

### வாங்குவீர் க்ளாக்ஸோ சன்ஷைன்—நம்பகமான குழந்தைப் பாலுணவு

க்ளாக்ஸோ சன்ஷைன் சரிவிகித ரீதியில் சரியான அளவு புரதம், கொழுப்பு, கார்போஹைட்ரேட், வைட்டமின்கள், தாதுப்பொருட்கள், இரும்புச்சத்து போன்றவற்றைக் கொண்டது. இது சுகாதார முறையில் தயாரிக்கப்பட்டு, டின்னில் அடைக்கப் படுகிறது. குறிப்பாக குழந்தைகளின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்றது.




க்ளாக்ஸோ

—தாய்மார்களின் நம்பிக்கைக்குரியது.




CASGLS-IR-203 TAM

அவன் ஆபீசர் அறையினின்றும் திரும்பி வரத் தாமதமாகியது. காரியாலயம் முடியும் நேரம் வந்தும் அவன் வந்தபாடில்லை. ராஜாமணி புறப்பட்டு விட்டான். முதலில் அவனுக்காகக் காத்திருக்க வேண்டும் போல் ஓர் எண்ணம் எழுந்தது. அவனுக்கே வேடிக்கையாக இருந்தது. தன்னுள் திடீரென்று ஒரு மாற்றம் ஏற்பட்டிருப்பதைப் போல் உணர்ந்தான். தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான். அவனுடைய சகாவான ராவ் கூப்பிட்டது கேட்டது.

''ராஜாமணி! புறப்படலாமா?''

''ம்!'' சொல்லியவாறே எழுந்தான்.

இரவு முழுவதும் சித்ராவுடன் பேசியதை நினைத்துப் பார்த்தான். தான் இது வரை பெண்களைப் பற்றி அனுமானித்திருந்ததற்கு முற்றிலும் மாறுபட்ட ஒருத்தியாக அவள் இருப்பது போல் பட்டது. அந்த மாறுதலான ஒரு போக்கே தன்னை அவளிடம் ஈடுபாடு கொள்ளச் செய்கிறதோ என்றுகூட எண்ணினான்.

வழிநெடுக ராவும் இவனும் மௌனமாகவே நடந்தனர். ராவ் திருமணமானவன். அவனுக்கு ஸைட் பிஸினஸ் உண்டு. மாம்பலம் வந்ததும் 'வரேன் ராஜாமணி' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

லாட்ஜில் மற்றவர்களுடன் இவன் சகஜமாகப் பழகுவது கிடையாது. புத்தகங்களே இவனுடைய நண்பர்கள். இப்பொழுது புத்தகத்தைப் படிப்பதென்பதும் முடியாது போயிற்று. சித்ராவின் நினைவு அலையாய் மோதிற்று. சற்று எரிச்சலாகக் கூட இருந்தது. தன்னுடைய தனித்துவம் கரைவது போலிருந்தது. கடற் கரையில் வீசி அடிக்கும் அலைகள் காலடி மண்ணைக் குழி பறிப்பது போல அவனுடைய நினைவுகள் இவன் மனத்தைப் பறித்தது என்னவோ போலிருந்தது. மறுநாள் அவளிடம் எதுவும் பேசக் கூடாது என்று சங்கற்பித்துக் கொண்டான்.

(தொடரும்)

## பரிசு பெறும் கட்டுரைகள்

நேயர்கள் எழுதி கல்கி பிரகரித்த 26 கட்டுரைகளைப் படித்து, பரிசுக்குரியனவற்றைத் தேர்ந்தெடுத்த நடுவர்கள்:

**1. பிரும்மஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரி**
**2. ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம்**
**3. ஆசிரியர் கல்கி**

பரிசு பெறுவோர் :

முதல் பரிசு : **ராதா சம்பத்**
ரூ. 250/- 56, ஹைஸ்கூல் ரோடு,
குத்தாலம் 609801.
கட்டுரை : உத்தாலம் தழைக்கும் குத்தாலம்

இரண்டாம் பரிசு : **எஸ். ஃ. பாத்திமுத்து சித்தீக்**
ரூ. 150/- H254, DDA நாராயணா,
புதுதில்லி-28.
கட்டுரை : பெருமானின் காலடியில் பெருமன்னர்கள்.

மூன்றும் பரிசு : **பத்மாசக்கரவர்த்தி**
ரூ. 100/- 93, ஹபிபுல்லாரோடு,
தியாகராயநகர், சென்னை-17.

கட்டுரை : துவாரகா வாழும் தயாளன்

இந்தச் சிறப்புப்பரிசுகள் தவிர பிரசுரமான எல்லாக் கட்டுரைகளுமே கல்கி பத்திரிகையின் வழக்கமான சன்மானத்தைப் பெற்று விட்டன.

''எல்லாருடைய நன்மைக்கும் உகந்த கட்டுரைகள். எழுதினவர்களின் பக்தி மணம் நன்கு வெளிப்படுகிறது'' என்று கூறி அனைவரையும் ஆசீர்வதிக்கிறார் பிரும்மஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரி.

''மிகவும் பயனுள்ள கட்டுரைகள். இத்தொகுப்பைப் பொக்கிஷமாகப் பாதுகாப்பேன்'' என்று சொல்லி அனைவரையும் வாழ்த்துகிறார் திருமதி சௌந்தரா கைலாசம்.

# ஆரோக்கியம், ஆனந்தம், ஒன்றுக்கொன்று ஆதாரம்!

## போர்ன்விடா பருகுங்கள்.

உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க போர்ன்விடா வழங்குங்கள். போர்ன்விடாவில் கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்துள்ளன. நூறு ஆண்டுகளுக்கும் மேலாக உணவுப்பான நிபுணர்கள்-காட்பரி தயாரித்து அளிப்பது.




**காட்பரிஸ் போர்ன்விடா**

உங்களோடு வளரும் நன்மை

OBM/7539/TM





## தூறல் நின்னு போச்சு

**கொ**ஞ்சம் பாதை மாறியிருக்கிறார் பாக்யராஜ்.

அசடு வழிய நடித்து ஜனங்களைச் சிரிக்க வைப்பதைக் குறைத்துக் கொண்டு ஒற்றைக் கையால் லாகவமாகச் சிலம்பைச் சுழற்றி 'வாத்தியாரு'க்குச் சிஷ்யனாக முயற்சி செய்திருக்கிறார்.

அப்பாவுக்குப் பயந்த பட்டிக்காட்டுப் பெண்ணை முறைப்படி பெண் பார்த்த பிறகு நிச்சயதார்த்தம் நடந்து முடிவதற்குள் வலுக் கட்டாயமாக அவளை 'லவ்' செய்ய அழைப்பதில் பாதிப் படம் நகர்ந்து விடுகிறது. பிறகு...

பவுன் தகராறில் கல்யாணம் தடைப்படுகிறது. அப்புறம் 'விட்டேனா பார்' என்று கதாநாயகன் அக்கிராமத்திலேயே 'டிகாணா' போட குஸ்தி வாத்தியார் (நம்பியார்) அவனுக்கு ஸ்க்ரூ கொடுக்க, தகராறு முற்றிப் போய், பிரச்னை 'குஸ்தி'யின் மீசைக்குத் தாவுகிறது. ''திருமணம் நடத்திக் காட்டுகிறேன், பார்'' என்று அவர் மீசையைக் காட்டிச் சவால் விடுகிறார். என்றாலும் அந்தக் 'கெட்டி'யான அப்பாவின் மனம் இளக அந்த மீசை காரணமாக இருப்பதில்லை. மகள் தனது அப்பா மீது வைத்துள்ள பாசம்தான் காரணமாகிறது.

பாக்யராஜின் நடிப்பு — தெரிந்த விஷயம்.

அந்தப் புது முகம் கலக்ஷனா?

பிஞ்சு முகம். அடிக்கடி கண்களைக் கசக்கி விட்டுக் கொள்கிற மாதிரி நடிப்பைக் கசக்கத் தெரியவில்லைதான்.

இவரை ஓட ஓடத் துரத்தும் கதாநாயகன் திட்டக்கூடாத வார்த்தையில் திட்டுவதைத் தவிர்த்திருக்கலாம்.

ஆக மொத்தம்:

அனுப்புத் தட்டிப்போச்சு!

## ரங்கா

**ந**ல்லவனும் திருடனும் ஒருவருக்கொருவர் உபதேசம் செய்து கொள்கிறார்கள். 'திருடாதே' என்கிறான் அவன். தன்னுடன் சேர்ந்து திருட அழைக்கிறான் இவன். கடைசியில் இருவருமே மாறிவிடுகிறார்கள். நல்லவன் திருடனாக, திருடன் நல்லவனாகிறான்.

தம்பி அடையாளம் தெரியாத அக்கா வீட்டிலேயே காம்ப் அடித்து அவளது குழந்தையைக் கடத்த நினைப்பதும், திருந்திய வில்லன் அதே வீட்டில் தங்கி, குழந்தையைக் கடத்த விடாமல் சவால் விட்டு மோதுவதும் ரொம்ப சூடு.

ரங்கா ரஜினியின் நடிப்புக்குக் கராத்தே மணி ஈடு கொடுக்கிறார். மணியின் பேச்சில், நடிப்பில் வித்தியாசமான கோணம் தெரிகிறது.

அக்காவாக வருகிறார் விஜயா. தன் குழந்தையை எந்த நேரத்திலும் கடத்திக் கொண்டு போய்விடக் கூடும் என்கிற தாயின் ஆதங்கத்தை நடிப்பில் காட்டியிருக்கிறார். கம்பீரமான அப்பா வேடத்துக்கு ஏ. ஆர். எஸ்.

ராதிகாவுக்கு நடிப்பை விடத் துடிப்பு அதிகம். காதல் துடிப்பு.

மாஸ்டர் சுரேஷ், ஹாஜா ஷெரீப், தேங்காய் சீனிவாசன், அசோகன், ரவீந்தர், உசிலை மணி இப்படி யாரெல்லாமோ கதையில் வந்து போகிறார்கள்.

சங்கர் — கணேஷின் இசையில் சில பாடல்கள் ஜனரஞ்சகம்.

சண்டைக் காட்சிகளை விரும்பிப் பார்ப்பவர்களுக்கு விருந்து.

டாப் ரஜினி ஃபார்முலா.



● சமீபத்தில் சில நாட்களாக பாரதி ராஜா அசைவம் சாப்பிடுவதில்லை. மது பானங்கள் அருந்துவதில்லை. சிகரெட் புகைப்பதைக்கூட நிறுத்தி விட்டார்.



# சங்கிலி



இந்தியில் வெளிவந்த 'காளி சரண்' கதை இது. தமிழில் அவசரப்பட்டு எடுத்துவிட்டார்களோ என்று நினைக்க வைக்கிறது. கதையில் என்ன புதுமை இருக்கிறது என்று யோசித்துப் பார்த்தால்... மூளை குழம்புகிறது.

கொலை... கொள்ளை... கடத்தல். அதற்கு ஒரு தலைவன். அவனைப் பிடிக்க முயன்ற டி. எஸ். பி. சரவணன் கொலை செய்யப்படுகிறார். அதே உருவில் ஒரு முரடன். பெயர் சங்கிலி. அவனை ஜெயிலில் இருந்து அழைத்து வந்து டி. எஸ். பி.யாக நடிக்கச் சொல்லிக் குற்றவாளியைப் பிடிக்கிறார்களாம்!

இந்திக்காரர்கள் ஒப்புக் கொண்ட ஒரு தவற்றைத் தமிழர்களையும் ஒப்புக்கொள்ளச் செய்யும் முயற்சி.

நடக்குமா?

புதுமை என்று சொல்லப் போனால் இரண்டைச் சொல்லலாம்.

கொலைகாரனைக்கண்டுபிடிக்க உதவும் LION என்கிற ஆங்கில வார்த்தை தலைகீழாக்கப்பட்டு NO. 17 எனப் போலீஸ் அதிகாரிகளைக் குழப்பமடையச் செய்வது.

இரண்டாவது அப்பா சிவாஜியையும் மகன் பிரபுவையும் ஒன்றாக மோதவிட்டிருப்பது.

அப்பா 'சிவாஜி' நடிக்காத நடிப்பா? இதில் அதைவிடச் சிறப்பாகத் தன்னை உயர்த்திக்கொண்டு நடிக்கச் சந்தர்ப்பங்கள் குறைவுதான்.

மகன் பிரபு ஒற்றைக் காலால் தொற்றித் தொற்றி வீராவேசமாகச் சண்டைபோடும் போதும் சரி, தனது தோல்வியைப் பெருந்தன்மையோடு ஒப்புக்கொள்ளும்போதும் சரி, நடிப்பில் தாம் வாரிசு என்பதை நிரூபித்துள்ளார்.

ஸ்ரீப்ரியா எப்படியோ வந்து கதையில் ஒட்டிக் கொள்கிறார். ஆனால் நடிப்பில் ஒட்டவில்லையே!

சுமித்ராவும் விலகிப் போய்விடுகிறார்.

மேஜரின் மாறுதல் நடிப்பு, மனோரமாவின் ரௌடித்தனம், சுருளிராஜனின் கலகலப்பில்லாத தோற்றம், மனோகரின் திடீர் விஜயம், ரோஜா ரமணியின் விசிட், நம்பியாரின் உறுமல், ஒய். ஜி. மகேந்திரனின் வேடிக்கை அத்தனையும் இருந்தும்கூட 'சங்கிலி'யால் படம் பார்ப்பவர்களைக் கட்டிப் போட முடியவில்லையே!



## காமிராவைச் சுற்றி

**சென்னையில் டி.வி. பார்த்துக் கொண்டிருப்பவர்கள் சோபனா ரவி செய்திகளை வாசிக்கும்போது சற்று உற்சாகமாக நிமிர்ந்து உட்காருவதை நான் கவனித்திருக்கிறேன்.**

அவரது தோற்றம், வார்த்தைகளை அழுத்தமாக உச்சரிக்கும்பொழுது கண்களைச் சுழலவிடும் லாகவம், புடவைத் தலைப்பைஇழுத்திப் போர்த்திக் கொண்டு அமர்ந்திருக்கும் அடக்கம் அனைத்தும் பெண்களைக் கூடக் கவரும் வகையில் அமைந்திருக்கும்.

சில பிரபல டைரக்டர்கள் சோபனா ரவியைத் தங்கள் படத்தில் நடிக்க வைக்க அவர் வீடு தேடிப் போவதையும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

அப்படிப்பட்ட சோபனா ரவியை — தயாரிப்பாளராகச் சந்தித்தபொழுது நான் கேட்க நினைத்த முதல் கேள்வி:

''சொந்தப் படத்தில் சோபனா நடிக்கிறாரா?''

சிரித்தவாறே ''இல்லை'' என்றார் ரவி.

''சினிமா உலக அனுபவம் எப்படி?''

''நான் புதுசு. சோபனாவுக்கும் புதுசுதான். என் அப்பா பல வருடங்களாக சினிமா உலகில் இருந்திருக்கிறார். அவர் பெயர் கல்யாண ராமன். 'ராணி லலிதாங்கி' போன்ற படங்களை எடுத்திருக்கிறார்'' என்றவாறே நாற்காலியில் அமர்ந்திருந்த பெரியவரைச் சுட்டிக் காட்டினார். JAPAN என எழுதப்பட்ட தொப்பி அணிந்திருந்தார் அவர்.

அப்பா, மகன், மருமகள் மூவரும் சேர்ந்த மாதிரி ஸ்டுடியோவுக்கு வந்து படப்பிடிப்பு வேலைகளைக் கவனிப்பதே அபூர்வ விஷயமாகப் பட்டது எனக்கு.

''ஸ்பரிசம்'' — படப் பிடிப்பைக் கவனித்தேன்.

கல்லூரி மாணவர்கள் எல்லாம் சேர்ந்து காதலர்களுக்குப் போலிக் கல்யாணம் நடத்தி வைக்கிறார்கள்.

சேகரும் ஸ்ரீலட்சுமியும் ஐந்தாறு முறை மாலை மாற்றிக் கொண்டார்கள். காட்சி சரியாக அமையாததால் மீண்டும் மீண்டும் மாலை மாற்றிக் கொள்ள ரோஜாவின் இதழ்கள் கீழே உதிர்ந்தன.

போதாக் குறைக்கு ஸ்ரீலட்சுமி தன் கழுத்தில் இருந்த மாலை இதழ்களைப் பிய்த்துத் தின்ன ஆரம்பித்தார்.

''லட்சுமி! பூவைத் திங்காதே. ஸ்டில் எடுக்கிறவரைக்கும் அது அப்படியே இருக்கணும்'' என்று எட்ட நின்றவாறே சொன்னார் சோபனா. லட்சுமி அப்படியும் கேளாமல் தின்றபடி இருந்தார்.

திருமணக் காட்சி முடிந்து ஒதிவைக்கும் காட்சியை எடுத்தார்கள்.

கும்பலில் இருந்தவர்களுக்கு ஒதப் பணம் தேவைப்பட்டது.

மாமனார் கல்யாண ராமனும், மருமகள் சோபனாவும் தங்களிடமிருந்த நோட்டு, சில்லறை எல்லாவற்றையும் பர்ஸிலிருந்து எடுத்துக் கொடுத்தார்கள்.

முழுதாகப் பத்து ரூபாய் ஓதியவர் மணி பாரதி. கவி சுப்பிரமணிய பாரதியாரின் சொந்தப் பேரன். அந்தப் படத்தில் கல்லூரி புரொபசராக நடிக்கிறாராம்.

**'சினிமா எக்ஸ்பிரஸ்' நடத்திய பரிசளிப்பு விழா**

- தமிழுக்கு சிவாஜி, கன்னடத்துக்கு ராஜ்குமார், தெலுங்குக்கு ஏ. நாகேஸ்வர ராவ், மலையாளத்துக்குப் பாலன் கே. நாயர், மது இத்தனை பேரும் வந்திருந்தார்கள்.
- இசை விழா நிகழ்ச்சி நடந்துகொண்டிருந்தபோது ராஜ்குமாரிடம் மேடைக்கு வந்து ஒரு பாட்டுப் பாடும்படி கேட்டதும் கண்ணை மூடிக்கொண்டு ஒரு நிமிடம் தியானம் இருந்தார். அடுத்த நிமிடம் கண்ணைத் திறந்து, ''ராகவேந்திர சுவாமிகளின் உத்தரவு கிடைத்து விட்டது. பாடுகிறேன்'' என்று கூறியவாறே மேடைக்கு வந்து பாடினார். மேடையை விட்டுக் கீழே இறங்கிய பிறகு அவர் சொன்னது, ''மெட்ராசிலே நான் பாடினது இதுதான் முதல் தடவை.''
- சிவாஜி கணேசன் எந்த விழாவுக்கு வந்திருந்தாலும் நீண்ட அங்கவஸ்திரம் அணிய மாட்டார். அன்று மட்டும் அணிந்து வந்தார்.
- மேடையில் கவர்னர் சாதிக் அலி அமர்வதற்குச் சிவப்பு நிறத்தில் விசேஷ நாற்காலி போடப்பட்டிருந்தது. கீழே முன் வரிசையில் அமர்ந்திருந்த கவர்னர் அதைப் பார்த்துவிட்டு, ''எனக்கு மட்டும் எதற்கு விசேஷ நாற்காலி? அதை அப்புறப்படுத்தி விடுங்கள்'' என்றார். சாதாரண நாற்காலி போடப்பட்டது.
- 'மூன்றாம் பிறை' படத்தில் கமலும் ஸ்மிதாவும் சேர்ந்து ஆடிய நடனத்தை மேடையில் ஆடிக் காட்டினார் ஸ்மிதா. அவருடன் மேடையில் ஆடியவர் கமல் அல்ல. அந்த நடனத்தை அமைத்துக் கொடுத்த நடன மாஸ்டர் சுந்தரம்.

**பூந்தொட்டி**

- கமலதா வீட்டில் நிறையப் பெண்கள் இருந்தாலும் புடவையில் ஒருவரைக் கூடப் பார்க்க முடியாது. ஆல் மாடர்ன் டிரஸ். (கமலதாவின் அம்மாகூடத்தான்.)
- 'பதினெட்டாம் படி' படத்தில் தவறு செய்த உடையப்பாவை ஓட ஓடத் துரத்தி அழகர் கோவில் பதினெட்டாம் படியில் கொண்டு போய் நிறுத்துகிறது இந்த யானை. இந்தப் படியில் நின்றுகொண்டு யாரும் பொய் சொல்லித் தப்ப முடியாது என்பது ஐதிகம். இக்காட்சியில் நடித்திருப்பது ஆண் யானை. பெயர் மட்டும் பிருந்தா.
- ஒவியர் ஜெயராஜ் ஒரு படத்தை இயக்கப் போகிறாராம்!





← சினிமா எக்ஸ்பிரஸ் பரிசளிப்பு விழாவில் சிவாஜிகணேசன், ராஜ்குமார், ஏ. நாகேஸ்வரராவ்












ஒரு
பெரிய வியாபாரிக்கு
கொசுக்களை விரட்டிட

இனிய
'பாடி—கார்டு'
தேவை.

அனுபவத்திற்கேற்ற
சம்பளம்.

எட்டுமணி நேரம் எரிந்து, கொசுக்களை
எட்டாத தூரத்திற்கு விரட்டுகிறது—

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்





தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
:.போர்ட், பம்பாய்-400 023. :.போன்: 273831



# தேவை ஒரு வேலை!

உடல் ஊனத்தை வென்ற இவர் வேலையில்லாத்திண்டாட்டம் என்றசமுதாய ஊனத்தை வெல்ல முடியவில்லையே என்று ஏங்குகிறார்! வேலை தந்து உதவ விரும்புவோர் நேரடியாக அவருடன் தொடர்பு கொள்ளலாம்.

"தளராத நம்பிக்கை, இடையறாத முயற்சி உலகை வெல்லும் அன்பு – இவைகள் வாழ்க்கைப் போராட்டத்தின் வீரர்கள் வைத்திருக்க வேண்டிய வாளாயுதங்கள்" இவை மூன்றும் உள்ளவன் நான்.

சாதாரண மனிதனாகப் பிறந்து இடைவழியில் காது கேட்கும் சக்தியை இழந்தேன். வகுப்பறைகளில் ஆசான் பெருமக்கள் நடத்தும் பாடங்கள், வழங்கும் அறிவுரைகள், மகிழ்ச்சியூட்டும் நகைச் சுவைக் கருத்துகள் போன்றவை எனக்கு முழுமையாகக் கேட்கவில்லை. ஆயினும் அவற்றைச் சிறிதளவேனும் என் செவிகளால் கேட்டறிய இயலும். கரும்பலகையில் எழுதிக் கற்றுக் கொடுக்கப் படும் பாடங்களும் என் பார்வைக்குத்தெரியவில்லை. கிட்டப் பார்வை உள்ளவன். எனினும் மனம் தளர்ந்து விடாமல், 'தன் கையே தனக்குதவி' என்ற ஆன்றோர் வாக்கை உணர்ந்து தானாகவே முயன்று படிப்பதில் ஈடுபட்டேன். பல ஆண்டுகளாய்ப் பக்கத்தில் அமர்ந்திருக்கும் மாணவர்களின் நோட்டைப் பார்த்து எழுதிக் கொண்டும், ஆசிரியர்களிடம் சென்று பாடங்களைக் கேட்டு உதவி பெற்றும், இடைவிடாமல் செய்த முயற்சியின் பயனாகவும் பி. ஏ. பட்டம் பெற்றேன். தமிழ் இலக்கியத்தில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றிருக்கிறேன். மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தின் காந்தி சிந்தனைச் சான்றிதழ்த் தேர்வெழுதி பி. ஜி. டி. பட்டமும் பெற்றிருக்கிறேன். தேசிய சேவைத் திட்டம், தேசிய முதியோர் கல்வித் திட்டம், மக்கள் பணி மன்றம் போன்றவற்றில் பணி புரிந்து அவைகளுக்கான சான்றிதழ்களையும் பெற்றிருக்கிறேன். காது கேளாவிடினும் பிறரைப் போலவே பேசுதல், எழுதுதல், பணி புரிதல், போன்ற திறமைகளைப் பெற்றிருக்கிறேன். கணக்குகள் எழுதுவேன்.

ஊராட்சி ஒன்றிய அலுவலகத்தில் வரி-வசூல் டிமாண்ட் எழுதும் பகுதி நேர எழுத்தராகப் பணியாற்றி யிருக்கிறேன். கல்லூரி எல்லையிலும், வெளி இடங்களிலும் நடைபெறும் போட்டிகளில் பல பரிசுகள் பெற்றதற்கு எனது எழுத்தார்வமே காரணம். பேச்சிலும் நான் வல்லவன். பல மாணவர்களோடு பேச்சுப் போட்டிகளில் பங்கு கொண்டு வெற்றி பெற்றிருக்கிறேன். உடல் ஊனத்தை வென்ற நான், வேலை யில்லாத் திண்டாட்டம் என்ற சமுதாய ஊனத்தை வெல்ல முடியாமல் தவிக்கிறேன்.

—ரா. ஹரிகிருஷ்ணன்

வயது 22

விலாசம் :

ரா. ஹரிகிருஷ்ணன் பி.ஏ.பி.ஜி.டி.,
14, சிவரக் கோட்டையார் தெரு,
தேவகோட்டை - 623 302
இராமநாதபுரம் மாவட்டம்

"என் பெயர் கொண்டவங்க இதே ஆபீஸ்லே இன்னும் நாலுபேர் இருக்காங்க. வந்தவுடனே என்னை எப்படிக் கண்டு பிடிச்சீங்க?"

"தூங்கிட்டிருப்பாருன்னு அடையாளம் சொல்லி அனுப்பினாரு எங்க முதலாளி!"

-அ.தெ.

# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...




**செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த**

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தி யின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

# இதோ ஒரு கிராமம்




அத்தனூர் சேலம் மாவட்டத்தில் ராசிபுரம் தாலுக்காவில் உள்ள ஒரு சின்னக் கிராமம். கிராமத்தைச் சுற்றிலும் மலைகள் மூன்று பக்கமும் சூழ்ந்துள்ளது. இதற்கு மத்தியில் சுமார் 200 வீடுகளைக் கொண்ட நாகரிகமற்ற, நாகரிகத்தைப் பற்றிக் கவலைப்படாத அமைதியான கிராமம் எங்கள் அத்தனூர் கிராமம்.

கிராமத்தில் மொத்தமாக இரண்டு தொழில்கள்தான் முக்கியமாக நடந்து வருகின்றன. ஒன்று கைத்தறி நெசவுத் தொழில்; மற்றொன்று விவசாயம்.

விசைத் தறி வந்துள்ள இந்தக் காலத்தில் கைத்தறி அதனுடன் போட்டி போட முடியவில்லை. கிராமத்தில் வசதியுள்ள இரண்டொருவர் விசைத் தறி போட்டுள்ளார்கள் என்றாலும், கிராம மக்களுக்குப் பசியைப் போக்கி வாழ்க்கையில் அத்தியாவசியப் பிரச்னைகளைத் தீர்க்கப் போதுமானதாக இல்லை என்றாலும் கிராம மக்கள் அமைதியாகவும், இருப்பதைக் கொண்டு திருப்தியாகவும் வாழ்ந்து வருகிறார்கள். இவர்கள் தங்களுக்குள் கூட்டுறவு சங்கமொன்றை அமைத்துக் கொண்டு சங்கம் குறிப்பிடும் ரகங்களை நெய்து, அதன் மூலம் வாழ்க்கையை நடத்துகிறார்கள்.

இந்தக் கிராமத்தில் ஓர் ஆரம்பப் பாடசாலை உள்ளது. 45 ஆண்டுகளுக்கு முன்பு நான் அதில் படிக்கும்போது எப்படி இருந்ததோ அப்படியேதான் இன்றும் இருக்கிறது.

இந்தக் கிராமத்தில் மருத்துவ வசதி என்பது மருந்துக்குக் கூட இல்லை. அவசர பிரசவ கேஸ், அவசரமருத்துவ உதவி வேண்டுமென்றால் 5 மைல் தொலைவில் உள்ள இராசிபுரமோ அல்லது 3 மைல் தொலைவிலுள்ள வெண்ணந்தூருக்கோ தான் போக வேண்டும்.

வருஷம் ஒருமுறை கிராமத்திலுள்ள அத்தனூர் அம்மன் திருவிழா நடத்துவார்கள். அதுசமயம் கிராமமக்கள் அனைவரும் புதுத் துணி அணிந்து விருந்தினரை அழைத்து விருந்து கொடுத்து அகமகிழ்ந்து நான்கு நாட்கள் கொண்டாடுவார்கள்.

முப்பது ஆண்டுகளாக மின் வசதிகூட இல்லாமல் இருந்த இக் கிராமத்துக்குத் திரு கருணாநிதி முதல்வர் பொறுப் பேற்றிருந்த சமயத்தில்தான் மின் இணைப்புக் கிடைத்தது. வெண்ணந்தூரிலிருந்து அத்தனூர் வழியாகச் சேலம் போவதற்கு பஸ் வசதி ஏற்பட்டுள்ளது. அதுவும் ஒன்றோ இரண்டோ ஓடிக் கொண்டிருக்கிறது.

ஆனால் இந்தக் கிராமத்தில் அரசியல் கட்சிகளின் ஆர்ப்பாட்டமோ, ஆரவாரமோ இல்லை. ஊர்ப் பெரியவர்கள் கூடி யாருக்கு வோட்டுப் போட வேண்டும் என்று முடிவு செய்கிறார்களோ அவர்களுக்குஓட்டுப்போட்டு விட்டு அமைதியாகத் தங்கள் தொழிலைக் கவனித்து வருவார்கள். பஞ்சாயத்துத் தேர்தல்களும் அப்படித்தான். மற்றபடி சினிமா போன்ற கேளிக்கைகளுக்கு மல்லூருக்கோ, இராசிபுரத்துக்கோ, வெண்ணந்தூருக்கோதான் செல்ல வேண்டும்.

இந்தக் கிராமத்தில் குறிப்பிடத் தக்க நபர் ஒருவர் இருக்கிறார். அவர் ரா. சம்பந்தமூர்த்தி சுவாமிகள் என்ற எழுபது வயதான ஒரு பிரம்மச்சாரி. இவர் சிறு வயதிலேயே இந்தக் கிராமத்துக்கு வந்து சேர்ந்தவர். அவர் ஒரு சிறு வைத்தியசாலை மாதிரி வைத்துக் கொண்டு, காயங்களுக்கு மருந்து அதாவது முதலுதவி சிறு அமைப்பில் செய்து வருகிறார்.

## சினிமா பார்க்க ஐந்து மைல் நடை!

இவர் இந்தக் கிராம முன்னேற்றத்துக்கு எத்தனையோ பல யோசனைகளையும் இளைஞர்கள் முன்னேற்றத்துக்கு உடற் பயிற்சி போன்ற நல்ல பல காரியங்களையும் செய்து வருகிறார்.

சுவாமிகள் யாராவது உணவு கொடுத்தால் சாப்பிடுவார். யாரிடமும் எதையும் கேட்க மாட்டார். இவர் கிராம நூல்நிலையம் ஒன்று வைத்துள்ளார். ஆரம்ப காலத்தில் கிராம இளைஞர்களை நல்வழிச் சங்கத்தில் அங்கத்தினர்களாகச் சேர்த்து, அங்கத்தினர்களிடத்தில் குறிப்பிட்ட சந்தாத்தொகை வசூலித்து அதன் மூலம் அறிவூறும் புத்தகங்களையும், கிராம மருத்துவசாலைக்குத் தேவையான மருந்துகளையும் வாங்கி வந்தார். இப்பொழுது அரசு அன்பளிப்புப் பெற்று நூல்களையும், மருந்துகளையும் வாங்கிக் கிராம மக்களுக்கு எந்நேரமும் சலிப்பின்றித் தன்னலமற்ற தன்னலமற்ற ஒரு புனிதமான தொண்டாற்றி வருகிறார்.

-மங்கை காளியண்ணன்







விவசாயிகள் கடன் பாக்கி..



தாரார்
தாரார்
தாரார்

விகடன்

அரசியல் கொடாக்கைகள்!



# சம்மதித்தால் தப்பா?

கதிர்க் கட்டைக் களத்து மேட்டில் போட்டுவிட்டுத் தலை மீதிருந்த சும்மாட்டுத் துணியை உதறிய கண்ணம்மா வயல் வரப்பில் இறங்கிச் சென்று கொண்டிருந்தாள். ஆரம்பம் முதல் அவளையே கவனித்துக் கொண்டிருந்த நாகசாமி மீசையை முறுக்கி விட்டார்.

வட்டமான முகம். நெற்றியில் குங்குமப் பொட்டு,பொங்கிவழிந்த வியர்வையில் கலைந்திருந்தது. கதிர்க் கட்டை அடிக்கடி சுமந்து சிறிது கலைந்திருந்த போதிலும் தலைமுடியின் நேர் வகிடு அமைப்பு மாறாமலிருந்தது. உழைக்கும் அந்தப் பாட்டாளி மக்களில் அவள் வித்தியாசமாகக் காணப்பட்டாள்.

களத்து வேலை முடிந்து விட்டது. கதிரவன் மலைக்குள் இறங்கி அதன் மஞ்சள் கதிரொளி மங்கி மறைந்து கொண்டிருந்தது. குளத்தங்கரையில் மாமரக் கூட்டங்கள். உழைப்பாளி மக்கள் தங்குவது அந்த மாமரத் தோப்பில்தான். இரவுப்பாட்டைக் கழிக்க மண் கட்டிகளை அடுப்பாக்கி மூட்டிக் கொண்டிருந்தனர். புகை மூட்டத்திலும் அவர்கள் உற்சாகமான ஆரவாரங்கள்.

கண்ணம்மா குளத்தில் இறங்கி, முகம்கை கால்களைக் கழுவித் துடைத்துக் கொண்டே தோப்புக்குள் வந்தாள். மாமரத்தின் தாழ்ந்த கிளையில் சேலைத் தொட்டிலில் அவள் மகன் சுகமாய் உறங்கிக் கொண்டிருந்தான். இன்றைக்கு வயிறாரச் சாப்பிடணும். குழந்தைக்கும் ஊட்டணும் என்று நினைத்துக் கொண்டாள். பல களங்களில் வேலை செய்து அரை மூட்டை வரை நெல் 'கொத்தாக'க் கிடைத்திருந்தது. ஊருக்குப் போவதற்குள் ஒரு மூட்டை சேர்ந்து விடலாம்.

பக்கத்து அடுப்பில் சிவப்பி தீமூட்டிச் சோறாக்கிக் கொண்டிருந்தாள். அருணாசலம் அவள் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டிருந்தான்.

''மச்சான்,கருவாடுன்னாப் பிரியப்படுவியே, வாங்கிட்டு வாரியா, ஆக்கித் தாரேன்'' கொஞ்சலுடன் சொன்னாள் சிவப்பி.

''வாணாம் புள்ளே! ரொம்பச் செலவழிச்சிடப்படாது. நாளைக்கு டவுனுக்குப் போயி ஒனக்குச் சேலையும் நம்ம ராசாப் பயலுக்கு டவுசரும் சட்டையும் வாங்கணும்'' என்றான் அருணாசலம்.

''உன் வயித்தைக் கட்டிப் போட்டுட்டு எனக்குச் சேலைதான் வாழுதா. முதல்ல உனக்கு வேட்டி எடு மச்சான்.''

அவர்கள் கொஞ்சலான நாடகத்தைக் கண்ணம்மா தினமும் பார்க்கிறாள். என்றாலும் அலுப்புத் தட்டாத ஒரு சுவையான காட்சிதான்.

கண்ணம்மா ஒரு படி நெல்லை எடுத்துக் கொண்டு களத்து மேட்டுக் கடைக்குப் புறப்பட்டாள்.

களத்தில் அறுவடையான நெல் மூட்டைகளை வண்டியில் ஏற்றி வீட்டுக்கு அனுப்பத் தயார் செய்து கொண்டிருந்தார் நாகசாமி.

கண்ணம்மா வருவதைப் பார்த்த அவர் கண்கள் அவள் மீது நிலைத்து நின்றன. கடையில் நெல்லைக் கொடுத்துவிட்டுப் பதிலாகச் சாமான்களை வாங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

நெல் வண்டி புறப்படத் தயாரானது.

''நெல்லை விட்ல இறக்கி வையுங்க. நான் வந்துடறேன்.''

நாகசாமி நெல் வண்டியை அனுப்பிவிட்டுக் கண்ணம்மா வரும் வழியில் மோட்டார் பைக்கில் அமர்ந்தவாறு ஒரு காலைத் தரையில் ஊன்றிய வண்ணம் நின்று கொண்டிருந்தார். கண்ணம்மா நடந்து வரும் அழகை ஆசை பொங்கப் பார்த்தார்.

''உன் பேர் கண்ணம்மாதானே?''

திடீரென்று நாகசாமியின் குரல் கேட்டு நின்றாள்.

''இங்கே வா. உனக்கு எந்த ஊரு.''

''தெக்குப் பக்கம்.''

''உன்னைப் பார்த்தா சேரிப் பொம்பள மாதிரித் தெரியல்லியே, நீ என்ன சாதி?''

அவள் சாதியைச் சொன்னாள்.

''அட நம்ம சாதி! உசந்த சாதியில் பிறந்துகிட்டா நீ சேரிக்காரங்களோட சேர்றே.''

''அவங்க கூடச் சேர்ந்தாலதான் வயித்துக்குக் கொஞ்சமாவது தண்ணி கிடைக்குது.''

''நீ ரொம்பக் கஷ்டப்பட்டிருப்பே போல இருக்கு. நம்ம சாதிக்காரின்னு தெரிஞ்சதும் என்னால தாங்க முடியல. நீ இருக்கிற லட்சணத்துக்கு இப்படியா அலையணும்? உனக்குச் சாப்பாடு தங்கறதுக்கு வீடு எல்லாம் செஞ்சு தர்றேன்...''

''முதலாளி....''

''என் பொண்சாதி வியாதிக்காரி. அவளுக்குத் தொண்டூழியம் செய்யவே நேரம் சரியா இருக்கு. நீ என் கூட வந்துட்டா தெறயப் பணம் தருவேன். ராணி மாதிரி வச்சுக் காப்பாத்தறேன்.''

''எனக்கு கொழந்தை இருக்கு முதலாளி.''

''இருந்தா என்ன? கல்யாணமா செஞ்சுக்கிடப் போறோம். நீ வெய்யிலேயும் பனியிலேயும் கஷ்டப்படாமச் சொகமா இருக்கலாமில்லியா? இந்தா இந்த ரூபாயை வச்சுக்க. நான் நாளைக்கி வர்றேன்.''

இரண்டு பத்து ரூபாய் நோட்டுக்களை அவள் கையில் திணித்து விட்டுப் பைக்கை ஸ்டார்ட் பண்ணி அவர் பறந்து விட்டார். கண்ணம்மா திரும்பி நடந்தபோது தூரத்தில் அருணாசலம் பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்தாள். தலை கவிழ்ந்தவாறு அவனைக் கடந்து சென்றாள்.

அடுப்பில் சோறு கொதித்துக் கொண்டிருந்தது. கண்ணம்மா தன் வாழ்வின் அவலத்தை நினைத்துப் பார்த்தாள். ஒவ்வொரு ஊரிலும் தனது ஜாதி ஜனங்கள் வீடு வாசலோடு சுகமாக வாழும்போது அவள் மட்டும் களத்து மேடுகளிலும் பொட்டல் காடுகளிலும் வெயிலில் உருகி மழையில் நனைந்து பனியில் விரைக்க வேண்டுமா?

பிறக்கும்போது அவள் ஏழையாய்ப் பிறக்கவில்லை. அவள் அப்பா ஒரு கடையில்

கனக்குப் பிள்ளையாகக் கௌரவமாக வாழ்ந்தவர். கண்ணம்மாவுக்குப் பன்னிரண்டு வயதாகும்போது மனைவியை இழந்தார். மகளைத் துணையாக வைத்துக் கொண்டு ஏழு வருடங்களைக் கழித்துவிட்டார்.

இந்த நிலையில் உடல் பழுதடைந்தது. படுக்கையில் விழுந்து விட்டார். சீரியஸான நிலை ஏற்பட்டபோது மகள் அனாதையாகிவிடுவாளோ என்று தவித்தார். கண்ணம்மாவுக்கு உரிய காலத்தில் கல்யாணம் செய்துவைக்க அவர் வருமானம் இடம் கொடுக்கவில்லை.

சோமு ஒரு கடையில் சொற்பச் சம்பளத்துக்கு இருந்தான். சாவதற்கு முன் மகளை ஒருவனிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என்ற அவசரத்தில் சோமுவுக்கு விளக்கு முன் கல்யாணம் செய்து கொடுத்து அந்தத் திருப்தியில் காலமாகிவிட்டார்.

சோமு ஊதாரி. கல்யாணமாகி விட்டாலும், குடும்பம் ஏற்பட்ட உணர்வு அவனுக்கு இல்லை. கண்ட கண்ட இடத்தில் கடன் வாங்கியிருந்தான். குடும்பம் தடம் புரண்டு கொண்டிருந்தது. பல்லைக்கடித்தவாறு, கஷ்டத்தைத் தாங்கிக் கொண்டாள் கண்ணம்மா. அவளுக்குக் குழந்தை பிறந்தபோது கடையில் கள்வாடிய தாக அவன் வேலைபோய் விட்டது. கடன்காரர்கள் நெருக்க ஆரம்பித்தார்கள். ஒளிந்து திரிந்தான். ஒரு நாள் வெளியே சென்றவன் திரும்பவில்லை. அன்று போனவன்தான். கண்ணம்மாவுக்குக் கடிதம் கூடப் போடவில்லை.

கையில் காசில்லாமல் கண்ணம்மா பட்ட பாடு... வீட்டுப் பாத்திரங்கள் ஒவ்வொன்றாக விற்றுக் காலத்தை ஓட்டினாள். தட்டு முட்டுச் சாமான்கள் அனைத்தும் போய்விட்டது. கணவன் திரும்பி வருவான் என்று நம்பி அவள் ஏமாந்து விட்டாள். தந்தையின் பாதுகாப்பில் வளர்ந்ததால் உழைத்துப் பிழைக்கும் வழியும் தெரியவில்லை. அக்கம் பக்கத்தவர் எத்தனை காலம் உதவி செய்வார்கள்? பல மாதங்கள் வாடகை கொடுக்காததால் வீட்டுக்காரர் அவளை வெளியேற்றி விட்டார்.

குழந்தையைத் தூக்கிக் கொண்டு பட்டினியோடு ஊரைக் கடந்து வந்தாள். நிம-



றென்று மயங்கி ரோட்டில் விழுந்துவிட்டாள். அறுவடைக்குப் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்த சேரிவாசிகள் ஓடிவந்தனர்.

அவளைப் பார்த்த அருணாசலம் "கணக்கப் பிள்ளை மகளல்ல!" என்றான்.

தண்ணீர் தெளித்து அவள் மயக்கத்தைப் போக்கினர். பசி மயக்கம். அருணாசலம் கடைக்கு ஓடிப்போய் இட்லியும் பாலும் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தான். அவள் நிலையைக் கேட்டுப் பரிதாபப்பட்டுச் சேரிக்கு அழைத்துச் சென்றனர்.

திக்கற்றுத் தவித்து நின்ற கண்ணம்மா வாழ வழி வகுத்துக் கொடுக்கச் சேரிவாசிகள் மிகுந்த அக்கறை காட்டினர். அப்பாவின் கடை முதலாளி வயலில் அருணாசலம் வேலை பார்த்திருந்ததால் அவள் அப்பாவுக்குப் பரிச்சயமானவன். எனவே கண்ணம்மா மீது அவனுக்கு மிகுந்த விசுவாசம் ஏற்பட்டது. தன் குடிசையை அவள் தங்கக் கொடுத்தான். தனக்கு வேறு குடிசை கட்டிக் கொண்டான். அவள் குழந்தைக்குத் தினமும் பால் வாங்கிக் கொடுத்தான்.

கண்ணம்மா சேரி மக்களோடு நெற்று எடுக்கவும் தோட்டத்தில் கூலி வேலை செய்யவும் போனாள். படிப்படியாகச் சேரி வாழ் மக்களின் தொழில் அவளுக்குப் பழக்கமாயிற்று.

குழந்தை அழுதது. தொட்டிலிலிருந்து எடுத்துப் பருப்பும் சாதமும் பிசைந்து ஊட்டினாள். அன்று வாய்க்கு ருசியாக வயிறாரச் சாப்பிட்டாள். வயிறு நிறைந்துவிட்டது. மனம்?

பகல் முழுதும் கடுமையாக உழைத்த பாட்டாளி மக்கள் மாலை உணவை முடித்துக்கொண்டு ஜோடி ஜோடியாய் அமர்ந்து பேசிச் சிரித்துக் கொண்டு குதூகலமாக இருந்தனர். வந்த புதிதில் அவர்கள் வாழ்க்கை முறைகள் அவளுக்கு விநோதமாக இருந்தது. எந்தப் பெண்ணுக்கும் துணை இல்லை என்ற பேச்சே கிடையாது. கணவன் இறந்துவிட்டாலும் சரி, அடித்து விரட்டி விட்டாலும் சரி, அவளை யாராவது ஒருவன் ஏற்றுக் கொண்டு விடுகிறான். அந்தப் பெண்ணும் பழசை மறந்து விட்டுப் புதியவனுடன் கூசாமல் வாழ்கிறாள்.

சிவப்பி கூட அப்படித்தான்.

அவள் வேறொருவனுக்கு வாழ்க்கைப்பட்டவள். அவள் முதல் கணவன் இன்னொரு பெண்ணைச் சேர்த்துக் கொண்டு அவளைக் கொடுமைப்படுத்தினான். அறுப்புக்கு வந்த இடத்தில் அவளை அடித்துக் குழந்தையோடு அநாதையாக விட்டுப் போய் விட்டான். அருணாசலம் இரக்கப்பட்டு அவளைத் தன்னுடன் கூட்டிக் கொண்டு வந்தான். இப்போது சிவப்பி அருணாசலத்தின் மனைவியாகக் குதூகலமாக வாழ்கிறாள்.

முதலில் அவர்கள் வாழ்க்கை முறை அருவருப்பாக இருந்தது. பழகப் பழக அகதி



“மழலைச்செல்வங்கள்...
மளமளன்னு வளரத் தேவை
அளவிலாத தெம்பு—
அருந்தத் தருகிறேன்
அதற்காக விவா”.








''என் குழந்தைகள் அலுக்காமல்
அரும்பாடுபட்டுப் படிக்கிறதையும்,
ஆர்வமுடன் விளையாடுவதையும்
பார்த்தால் வியப்படைவீர்கள்.
அதற்குத் தேவையான வற்றுதெம்பு
அவர்களுக்கு விவாவிலிருந்து
கிடைக்கிறது. பார்லி, கோதுமை
இவற்றின் மால்ட் சத்துக்கள்,
பால், வைட்டமின்கள் அடங்கிய
விவா ஜீரணிக்க எளிதானது.
பாலிலேயும் சரி, நீரிலேயும் சரி
கலக்க இலகு. சூடான பானமாகவோ,
குளிர் பானமாகவோ சுவையுடன்
அருந்தலாம். அலுக்காமல்
படிக்கவும் விளையாடவும் சளைக்காத
தெம்பு— தருகிறது விவா''

**“தெம்பு தரும் விவா
உனக்கு நன்றி !”**

ASP/JIL: V/2/2015 TM



மாண்ட் (உலக) தேர்வில் வெள்ளிப்
பதக்கம் வென்றது, ஆம்ஸ்டர்டாம் 1981

**JiL** ஜகத்ஜீத் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

ஆண்டாண்டு கால உத்திரவாதம்உடையது! அணிவதற்கு தங்கத்தின் தரம் உடையது!

22 காரட்

# ரூபா மேக்னட் கோல்டு கவரிங்

நகைகள் ஒன்றே!

No. 34 Rs. 77-50 · No. 41 Rs. 85-00 · No. 22 Rs. 77-50 · No. 35 Rs. 85-50 · No. 30 Rs. 170-00 · No. 631 Rs. 75-00 · No. 375 Rs. 16-50 · No. 602 Rs. 75-00 · No. 42 Rs. 170-00 · No. 51 Rs. 77-50 · No. 52 Rs. 77-50 · No. 39 Rs. 77-50 · No. 32 Rs. 85-00

No. 114 Rs. 49-50 · No. 112 Rs. 49-50 · No. 115 Rs. 49-50 · No. 97 Rs. 49-50 · No. 117 Rs. 62-50 · No. 81 Rs. 62-50 · No. 120 Rs. 62-50 · No. 118 Rs. 62-50

No. 182 Rs. 18-50 · No. 136 Rs. 15-50 · No. 19 Rs. 18-50 · No. 16 Rs. 24-50 · No. 239 Rs. 6-25 · No. 377 Rs. 11-50 · No. 175 Rs. 22-50 · No. 370 Rs. 16-50 · No. 257 Rs. 7-00 · No. 175A Rs. 22-50 · No. 373 Rs. 14-50

MINERVA

## கதம்ப மாளிகை

36, பாண்டி பஜார், தி. நகர் - சென்னை - 600017

சேட்லாக் வேண்டுவோர் 75 பைசா தபால்தலையுடன்
விலாசத்தை தெளிவாக எழுதவும்
[illegible]

பரதநாட்டியம் செட் கிடைக்கும்

---




### இருமலா ? இளைப்பா ? தும்மலா ?

பித்தத்தினால் ஏற்படும் மயக்கம், இருதயம் படபடப்பு நெஞ்சு வலி — பிடரி வலி — உடல் வலி — மலச்சிக்கல் — பசி மந்தம் ருசியின்மை — அடிக்கடி ஜலதோஷம் — ஓயா தும்மல் — நீர் வடிதல் தலைபாரம் — இருமல் — கோழைக்கட்டு — மேல் மூச்சு — இளைப்பு கர்முர்சென்று இழுப்பு — உடல் பலஹீனம் — உடம்பு தேறாமை அசதி — சோர்வு — களைப்பு — ஆஸ்துமாவின் ஆரம்ப நிலை

இவைகளிலிருந்து நிவாரணம் பெற, ஆரோக்கியம் பெற,

உங்களுக்கு பெரிதும் பயனளிக்கிறது

# "சிவராஜ்" நெல்லிக்காய் லேகியம்

## இரத்தவிருத்திற்கும், இளைத்த உடம்பு தேறவும் சக்தியளிக்கும் டானிக்

| பவளசத்து, சிலாசத்து, சிருங்கி சத்து சேர்ந்தது | வெள்ளி ரேக் — பவளசத்து — பஸ்பம் கலந்தது |
|---|---|
| **250 கிராம் புட்டி ரூ. 30-00** | **250 கிராம் புட்டி ரூ. 40-00** |

போஸ்டேஜ் இலவசம். V.P.P.யில் பெற எழுதுங்கள்

---

தயாரிப்பு: **சிவராஜ் சித்த வைத்தியசாலை**

(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன்பக்கம்)

**சேலம் - 636007**

யான ஒரு பெண்ணுக்குத் துணையும் பாது காப்பும் கிடைப்பது சரிதான் என்று ஒப்புக் கொண்டு விட்டாள். அதே நேரம் தன்னைப் பற்றியும் நினைத்துக் கொண்டாள். தனக்கும் இப்படி ஒரு துணை அமைய முடியுமா என்று ஒவ்வொரு சமயம் அவள் நினைப்பதுண்டு.

ஓடிப்போன கணவன் இனி வரப்போவ தில்லை என முடிவு கட்டிவிட்டாள். கண வன் இருக்கிற உறுத்தலோ பாசமோ எல் லாம் அவளை விட்டுப் போய்விட்டது. தனக் குக் கணவன் இருக்கிறதை அவள் மறந்தே விட்டாள்.

உழைத்து உழைத்து அவள் சோர்ந்து விட்டாள். கொஞ்ச காலமாவது சுகமாக வாழவேண்டும் என்ற உணர்வு அவளுள் கிளர்ந்து எழுந்து கொண்டிருந்தது. வீடு வாசல், அமைதியான வாழ்க்கை முறை இவைகளின் மீது அவள் நாட்டம் திரும்பிக் கொண்டிருந்தது.

''அம்மா, சாப்பாடு முடிச்சுட்டீங்களா?''

அருணாசலம் சிவப்பியையும் குழந்தையை யும் தூங்கவைத்துவிட்டு வந்திருந்தான்.

''ஆமா, அருணாசலம். இன்னிக்குத்தான் வயிறு நிறையச் சாப்பிட்டேன்.''

''அம்மா, முதலாளி உங்க கிட்டப் பேசிக் கிட்டிருந்தாரே.'' மெதுவாகக் கேட்டான்.

''யாரு, எந்த ஊருன்னு விசாரிச்சாரு.''

''ரூபா நோட்டுத் தந்த மாதிரி தெரிஞ் சது.....''

கண்ணம்மா தலை குனிந்தாள்.

''ஏம்மா சும்மா இருக்கீங்க. எதுன்னாலும் எங்கிட்டச் சொல்லுங்க. முதலாளிமார்கள் உழைப்பாளிப் பொண்ணுன்னு பேயா அலை வாங்க. பணத்தைக் குடுத்து வலை வீசு வாங்க.''

''அருணாசலம், தப்பா நினைச்சுக்க மாட் டியே. முதலாளி எனக்கு வீடு பார்த்து வாழ வைக்கிறதாச் சொன்னாரு...''

''நீங்க என்ன சொன்னீங்க.''

''நான் ஒண்ணும் சொல்லலே. எனக்குப் புருஷன் வேணுமின்னு அவசியமில்லை. என் னால கடுமையா உழைக்க முடியல. எனக்கும் என் குழந்தைக்கு ஒரு ஆதரவு வேணும்னு தோணுது.''

''அப்படின்னா முதலாளிக்குச் சம்மதம் சொல்லப் போறீங்களா?''

''சம்மதிச்சா தப்பா அருணாசலம்?''

''அம்மா நாங்க வாழ்றதைப் பார்த்துத் தானே உங்களுக்கும் இப்படி ஒரு எண்ணம் வந்திருக்கு! எங்கள் வாழ்க்கை முறை வேறே. நீங்க வாழப்போற முறை வேறம்மா! சிவப்பி இன்னொருவன் பெஞ்சாதியா இருந்தவதான் என்கிட்ட என்னிக்கு வந்தாளோ, அன்னி லேருந்து என் பெஞ்சாதியாவே ஆயிட்டா. அவனுக்குப் பெத்த இவ குழந்தையை என் குழந்தையாவே ஒத்துக்கிட்டேன். எத்தனை பேருக்கிட்ட வாழ்ந்தாலும் சரி, எங்ககிட்ட ஒரு பொண்ணு அடைக்கலமா வந்துட்டா சொந்தப்பொஞ்சாதியா நடத்தற மனேபக்கு வம் எங்க கிட்டே உண்டு. அதைக் கொறஞ் சதா நாங்க நெனைக்கவே இல்லே. ஆனா நீங்க ஏத்துக்கற வாழ்க்கை அசிங்கம்!''

அவள் திடுக்கிட்டாள். பெண்கள் மறு வாழ்வுக்காகச் சீர்திருத்த மகான்கள் வற் புறுத்துகிற வாழ்வைப் பரம்பரையாக அனு சரித்து வரும் அருணாசலம் இந்த வாழ்வைக் கேவலமாகச் சொல்கிறானே!

''அம்மா, முதலாளி உங்களுக்கு வீடு கட்டித் தருவாரு, நகை நட்டுப்போடுவாரு. உங்க கிட்டப் பிரியமாவே இருப்பாரு. ஒத் துக்கறேன். ஆனா உங்களைப் பெஞ்சாதியா நினைப்பாரா? உங்க பிள்ளையை நிட்டேபார்க்க மாட்டாரு. நீங்க அவருகூட உரிமையோட



நாலு இடம் போக முடியுமா? உங்களுக்கு அந்தக் கேவலமானவாழ்வு வேண்டாம்மா.''

அந்தப் பாமர மக்களின் வாழ்முறை மாறு பட்டதாக இருந்தாலும் புனிதமானதுதான். தான் ஏற்க நினைத்த வாழ்வு? அவளுக்கே அசிங்கமாக இருந்தது.

''கொஞ்சம் மதி பிசகிட்டேன் அருணா சலம்.''

கண்ணம்மா இடுப்பில் செருகியிருந்த இரு பது ரூபாயை எடுத்து அருவருப்புடன் தூர எறிந்தாள்.

''அருணாசலம், இந்த ரூபாயை முதலாளி வந்தா நீயே கொடுத்திடு'' என்றாள்.


துப்பாக்கி இன்னொரு முறை வெடித்தது


மீண்டும் விளக்கு வந்த போது —
ஐயோ! தலைவனைச் சுட்டுட்டு மத்தவங்க தப்பிச்சு ஓடிட்டாங்களே!
நீ நினைப்பது தப்பு. உண்மையான பாஸுக்கு இவன் மறைப்புத் திரையாத்தான் இருந்தான்.


அப்போ அந்த உண்மையான பாஸ் யாரு? அவன் இப்போ எங்கே? இவனே எங்கே யாவது திரும்பியும் இந்த வேலையைத் தொடங்க மாட்டான்கறது என்ன நிச்சயம்?


என்னோட யூகம் சரியா இருந்தா... இந்த இடத்தைச் சுத்தி இப்போ போலீஸ் இருக்கும். அந்த உண்மையான பாஸ்... அவன் தான்... போலி பாஸுக்குப் பின்னாலே நின்னுக்கிட்டிருந்தானே... அவன் இத்தனை நேரம் அவங்க கிட்டே மாட்டியிருப்பான்.


மிஸ்டர் ரமேஷ்! உங்க யூகம் கரெக்ட். தன்னைப் பத்தின உண்மை தெரிஞ்ச ஒரே ஆளைத் தீர்த்துட்டு இவன் ஓடப் பார்த்தப்போ... கப்புனு பிடிச்சுட்டோம்.
லோ, கதை முடிஞ்சுது!


உங்களைப் பொறுத்த வரைக்கும் முடிஞ்ச மாதிரி தான். ஆனா, எங்களுக்கு இன்னும் நிறைய வேலை இருக்கு... அதுக்கு முன்னாலே உங்க கிட்டே ஒரு விஷயம் சொல்லணும்.


என்ன விஷயம்?
உங்களைப் பத்தி என் மனசிலே ஒரு எண்ணம் விழுந்தது. அது கரெக்ட் தான்னு நிரூபிச்சுட்டீங்க.


நீங்க எதைச் சொல்றீங்க?
சந்தேகம் தரக் கூடிய ஒரு சூழ்நிலையிலே நீங்க இருந்தீங்க. அதே நேரத்திலே உண்மையைச் சொல்லக்கூடிய மனநிலையிலும் நீங்க இல்லை.


உண்மை தான். நான் ஒரு வெறியிலே இருந்தேன். என்னோட நெஞ்சமெல்லாம் நினைவெல்லாம் – நிறைஞ்சிருந்த நித்யாவை யாரோ ஒருத்தன் கொலை செஞ்சுட்டான்னு தெரிஞ்சப்போ, அவனைக் கண்டு பிடிச்சுப் பழி வாங்கப் போறது நான் தான் அப்படீங்கற வெறி...


அதைப் புரிஞ்சுக்கிட்டு வேணும்னே உங்களைத் தப்பிக்க விட்டேன். இந்தக் கூட்டம் இருக்கிற இடத்துக்கு என்னைக் கொண்டு வந்து விட்டுடுவீங்கன்னு எதிர் பார்த்து உங்களை ஃபாலோ செஞ்சேன். என்னோட நம்பிக்கை சரிதான்னு நிரூபிச்சுட்டீங்க. தாங்க்யூ மிஸ்டர் ரமேஷ்!
முற்றும்

“ यस्मिन्देशेहि यो जात : तस्मै तज्जौषधं हितम् ॥ ”

"எந்த தேசத்தில் (சீதோஷ்ண நிலையில்) எவன் பிறந்திருக்கிறானோ அவனுக்கு அந்நாட்டு மூலிகைகளே சிறந்த பலனை அளிக்கும்."

—(சரகஸம்ஹிதை)



## கும்பகோணம் "லலிதா பார்மஸி" மருந்துகளின் சிறப்பு அம்சங்கள்

ஸ்ரீ காஞ்சி பெரியவர்களால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட பகவான் ஸ்ரீ தன்வந்திரியின் ஸன்னதியில் மருந்துகள் தயாராவது.

பல வருஷங்கள், முறைப்படி "ஆயுர்வேதத்தை" அத்யயனம் செய்த நிபுணர்களின் நேர்பார்வையில் மருந்துகள் தயாராவது.

எந்த மருந்தையும் எளிதில் முறைப்படி தயாரிக்க உதவியாகப் பல உயர் வைத்ய நூல்கள் கொண்ட புத்தகசாலை, சிறந்த மூலிகைசாலையுடன் இணைந்து விளங்குவது.

★

சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கு

# லலிதா பார்மஸி

(ஸ்தாபிதம் 1942)

தலைமை ஆபீஸ் :

**கும்பகோணம் Pincode: 612001**
போன் : 123

DRUG LICENCE No. 40/78
(மத்திய அரசால் சட்டுத் தொகைக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது.)

கிளைகள்

மஹாதானத் தெரு, மாயூரம் 609001
போன் : 379

வடக்கு வீதி, சிதம்பரம் - 608001

நெ. 39, ரங்கநாதன் தெரு,
சென்னை - 600017
போன் : 441454

நெ. 105, கச்சேரி ரோடு,
சென்னை — 600004
போன் : 73007

கடிதம் மூலம் வைத்திய ஆலோசனை பெற விரும்புவோர்கள்
35 பைசா தபால் தலையுடன் தலைமை அலுவலகத்திற்கு எழுதக் கோருகிறோம்.
(கடிதங்கள் ரகசியமாக வைக்கப்படும்.)

# கடவுளின் அச்சுப் பிழை!

இந்த ஆண்டின் பாரதீய ஞான பீட இலக்கியப் பரிசு பஞ்சாபி எழுத்தாளர் திருமதி அம்ருதா ப்ரீதம் பெற்றுள்ளார். பாரதப் பிரதமருக்கு இவர் ஏண்பது நாள் மூத்தவர். இவர் பிறந்த ஊர் இன்று பாகிஸ்தானுக்குள் அகப்பட்டுக் கொண்டு விட்டது. தில்லியில் ஒரு தொழிலதிபரை மணந்த அம்ருதா விவாக ரத்துப் பெற்றவர். கவிதை, சிறுகதை, நாவல் என்னும் மூன்று இலக்கியப் பிரிவுகளிலும் இவருக்குக் கணிசமான பங்கு உண்டு.

இப்போது ஒன்றரை லட்சம் ரூபாய் பரிசான பாரதீய ஞான பீடப் பரிசு பெறும் நூல் பத்து ஆண்டுகளுக்கு முன்பு வெளியான ஒரு கவிதைத் தொகுப்பே — 'காகஸ் தே கான்வாஸ்' (காகிதமும் திரைச் சீலையும்) ஐம்பதுக்கும் குறைவாக, பெரும்பாலும் ஒரு பக்கத்துக்குள் முடியும் சிறு வரிகள் கொண்ட கவிதைகள். சிலவற்றை குஷ்வந்த் சிங் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார்.

பதினாறு வயதிலேயே கவிதை எழுதி, கவிஞர் என்றே பெரும் புகழ் பெற்ற அம்ருதா, தற்போது நாவல் எழுதுவதில்தான் தீவிரம் காட்டிவருகிறார். ''49 நாட்கள்'' என்பது ஒரு நாவலின் தலைப்பு. திபேத்திய சம்பிரதாயப்படி மரணத்துக்கும் மறு பிறவிக்கும் இடையே 49 நாட்கள் உள்ளன என்ற கருத்தில் கொடுத்த தலைப்பாம் இது. இரண்டாவது உலகப் போரின் சமயம் ரஷ்யர்களால் பிரிட்டிஷ் ஒற்றர் எனப் பிடிக்கப்பட்டு 16 ஆண்டுகள் சைபீரிய கைதி முகாமில் வாடிய இந்தியப் புரட்சி வீரர் மதன் மோகன் ஹர்தத் என்ற விடுதலை வீரரின் வாழ்க்கையை நாவல் போலப் பஞ்சாபியில் எழுதியிருக்கிறார். முதிய வயதில் உள்ள ஹர்தத் அவர்களே இதனை உர்தூவில் மொழிபெயர்த்து வருகிறாராம்!

வெளி நாடுகளில் பயணம் செய்துள்ள அம்ருதாவுக்கு இந்தியாவை முழுவதும் காணவில்லை என்பது ஒரு குறை. ''இந்தப் பரிசுப் பணத்தைக் கொண்டு பாரதத்தின் மூலை முடுக்கெல்லாம் சுற்றப் போகிறேன்'' என்று கூறியிருக்கிறார்.

பரிசு நூலின் இரண்டு கவிதைத் தலைப்புகள் விசித்திரமாகப்பட்டன. தலைகீழான கேள்விக் குறி ஒரு கவிதைக்குத் தலைப்பு: நேரான கேள்விக்குறி மற்றதற்குத் தலைப்பு. பஞ்சாபியிலிருந்து கேட்டு அறிந்த தமிழாக்கம் இவை:

¿

எல்லாக் கேள்விக்கும் விடை உண்டு
எல்லா விடைகளும் கேள்வி எழுப்பலாம்.
ஆனால் இவற்றுக்கு ஆதாரம் கிடைப்பதில்லை.
அதனால் இந்த பூமியில் இன்று
கேள்விகள் தலைகீழாய்
சிரசாசனம் செய்கின்றனவா.
அல்லது பிராணயாமம் செய்கின்றனவா?

?

இந்த உலகம் ஒரு நல்ல புத்தகம்
சூரிய சந்திரன் முன் அட்டை, பின் அட்டை
ஓ இறைவா,
பசியும் துக்கமும் கொடுமையும் ஒடுக்கமும்
இதன் பொருளடக்கமா, உன்
அச்சுப் பிழைகளா?

**'அம்ருதா ப்ரீதம்'**
என்றே தலைப்பிட்ட ஒரு கவிதை:

வேதனை ஒன்றை
மௌனமாய் உள்ளிழுத்தேன்—
சிகரெட் உறிஞ்சுவது போல.
இந்தக் கவிதைகளை
இப்போது உதிர்க்கிறேன்—
சிகரெட் சாம்பலைப் போல.

-டி. எஸ். வி.

# உகந்த எனமலை உரிய முறையில் உபயோகிக்கும் முழு விவரங்களை அறிந்து கொள்ள வாரீர்

வீடுகளில் எளிதாக பாதிப்புக்கு உள்ளாகும் சமையலறை, ஃபர்னிச்சர், கதவுகள், அலமாரிகள் மற்றும் ஷெல்ஃபுகள் ஆகியவற்றின் பரப்புகளுக்குக் கடுமையாக ஈடுகொடுக்க கூடிய, நெரோலாக் ஸிந்தெடிக் எனமல் போன்ற பெயிண்ட்களே தேவை. இதனை உரிய முறையில் பயன்படுத்த, நெரோலாக் பெயிண்ட்ஸ் "All you wanted to know about painting" என்ற இலவச விளக்கப் புத்தகத்தை வழங்குகிறது.

கீழே தரப்பட்டுள்ள கூப்பனை நிரப்பி உடனே தபாலில் அனுப்பி வைக்கவும்.

> தயவு செய்து நெரோலாக் பெயிண்ட்ஸ் விளக்கப் புத்தகம் ஆங்கிலப் பிரதி ஒன்று அனுப்பவும்.
>
> பெயர் ______________________
>
> முகவரி ______________________
>
> ______________ பின்கோட் ________
>
> குட்லாஸ் நெரோலாக் பெயிண்ட்ஸ் லிமிடெட்
> தகவல் டெஸ்க்,
> த.பெ.எண் 16322 பம்பாய் 400013
>
> 164R-V

தயவு செய்து 35 காசு தபால் முத்திரையும் வைத்து அனுப்பவும்.




ULKA-GNP-164R-TM



''மறக்க முடியாதது?''

''பாத யாத்திரை.''

''மறக்கக் கூடியது?''

''பஞ்சாயத்துத் தேர்தல்.''

''சேர்ந்தே இருப்பது?''

''சினிமாவும் அரசியலும்.''

''சேர முடியாதது?''

''ஜனதா, லோக்தள், பி.ஜே.பி.''

''அரசியலில் ஒன்று இரண்டு மூன்றுளது?''

''ஒன்றானது – தி.க. – அதுவே இரண்டானது. பிறகு தி. க., தி. மு. க., அ. தி. மு. க. என மூன்றானது.

''நன்று ஒளவையே, நன்றி.''

''பிள்ளாய்! என்ன வரம் வேண்டுமோ கேள்?''

''நாடு வளம்பெற ஜனத்தொகை உயரா திருக்க வேண்டும்.''

''அப்படி ஒருவேளை அதிகரித்தால்?''

''அதையாவது 'வெளி நாட்டுச் சதி' என அரசியல்வாதிகள் சொல்லாதிருக்க வேண்டும்.''

-628

# ஔவையே..!

''ஒளவையே பெரியது எது:''

''தமிழக முதல்வரின் ஏழு மணி நேர உரை.''

''சிறியது எது?''

''பொன்னையன் வீசிய மணல் முடிச்சு.''

''அரியது எதுவோ?''

''மாமியார் மருமகள் ஒற்றுமை.''

''புதியது எது?''

''தெலுங்கு தேசம்.''

''எளியது எது?''

''கிராமத்திற்குப் பற்பொடி.''

''கொடியது எது?''

''ரயில் பயணம்.''

''பிரிக்க முடியாதது?''

''சட்ட சபையும், ரகளையும்.''

''பிரிக்கக் கூடாதது?''

''குண்டு ராவும் காவிரி ஆறும்.''



''நாராயணா நாசமாய்ப் போனவனே! அம்பிகே அடங்காப்பிடாரி! சங்கரா சனியனே!''

''என்னங்க இது?''

''ஒன்றுமில்லே, அம்மா பூஜை செய்யும் போது விஷமம் செய்யற குழந்தைகளைத் திட்ட றுங்க''

-எல். மகாதேவன்

இலக்கியத்தில் பரக்கக் காணப்பெறும் இறையுணர்வு மனிதர்களுக்குத் தரவேண்டிய முடிந்த பயன் என்ன? சாதி, சமய வேறுபாடின்றி எல்லோரும் கடவுளின் மக்கள் என்ற உணர்வைப் பெறுவதே.

இவ்வுணர்வை ஏற்படுத்தி வரும் கவிஞர்கள் வரிசையில் இருபதாம் நூற்றாண்டுப் புலவனாகத் தோன்றி, இலக்கியத்தையும், இறையுணர்வையும் ஒருசேர வளர்த்தவன், மகாகவி பாரதி.

புவியனைத்தும் போற்றிட வான்புகழ் படைத்துத் தமிழ் மொழியைப் புகழில் ஏற்றும் கவியரசர் தமிழ் நாட்டுக்கு இல்லை என்னும் வசையைக் கழித்தவன் பாரதி. அவன் சொல் புதிது; பொருள் புதிது; சுவை புதிது; அவன் கவிதை சோதி மிக்க நவ கவிதை. வாளேந்து மன்னர்களும் மானியங் கொள் புலவர்களும் தாளேந்திக் காத்த தமிழ் மொழியின் வளர்ச்சியில் ஒரு தேக்கம் வந்தபோது அதனைத் தோளேந்திக் காத்தவன், சுப்பிரமணிய பாரதி!

அவன் ஒரு ஆன்மிகக் கவிஞன். பக்திப் பயிரை வளர்த்தவன். மொழிப் பற்று மிக்கவன். தமிழ் இனம் உயர வேண்டும் என்று எண்ணியவன். ஆனால் மொழிப் பற்றும், இனப் பற்றும் பகையை வளர்த்து விடக்கூடாது என்பதில் கவனமாக இருந்தவன். சாதி, இன வேறுபாடுகளை யெல்லாம் கடந்து, ஆன்மாக்கள் அனைத்தும் நன்றாக பேசுகிறான். சிவப்பரம்பொருளுடன் அவன் பேசும்போது அதில் அணுக்கம், நுணுக்கம் ஆகிய உணர்வுகள் இருக்கின்றன.

''சந்திரமௌலி! யாரும் பேசாப் பொருளை நான் பேசத் துணிந்துவிட்டேன். கேட்காத வரத்தைக் கேட்கத் துணிந்துவிட்டேன்!

''அந்தப்பேச்சும் வரமும் என்ன என்கிறாயா?

''மண்ணுலகத்து எத்தனையோ மனிதர்கள் விலங்குகள், பறவைகள், புல் பூண்டு, மரங்கள் இருக்கின்றன. இவையெல்லாம் என் தொண்டினால் துன்பம் தீர்ந்து இன்புற்று வாழ வேண்டும் என்பதே.''

இங்ஙனம் ஒரு பெரிய லட்சியத்தைத் தேவ தேவனிடம் முறையிட்டுக் கேட்கிற பாரதி அந்த உயரிய நிலையைத் தரும் வரத்தை இறைவன் உடனே தர வேண்டும் என்றும் கேட்கிறான்.

ஆகாயம் உயர்வானது. ஒரு மனிதன் வாழ்க்கையில் ஞானம் பெற்றுவிட்டால் அவனும் உயர்ந்து விடுகிறான். ஆகாயத்திலிருந்து பூமியைப் பார்த்தால் எல்லாம் ஒன்றாகத்தானே தெரியும்? ஞானமான ஆகாயத்திற்கு உயர்ந்து விட்டால் எல்லாமும் எல்லோரும் ஒன்றுதானே!

பாரதி பேசுகிறான்: ''இறைவா! ஞானகாசத்து நடுவே நான் நிற்பேன். 'இவ்வுலகத்துள்ள சகல உயிருடைப் பொருள்களும் உயிரற்ற பொருள்களும் இன்புற்று அன்புடன் வாழ்க' என்பேன். அதனை நீ திரு

# பேசாப்பொருளைப் பேசிய புலவன்

கீரன்

வாழவேண்டும் என்று எண்ணி, அந்த லட்சியத்தைப் பெற இறையுணர்வு இன்றியமையாதது என்று உணர்ந்தவன்.

தன்னுயிர் போலே தனக்கு அழிவு எண்ணும் பிறனுயிர் தன்னையும் கணிக்கும் மெய்ஞ்ஞானத் துணிவுடன், ஞானகாசத்து நடுவே நின்று பேசாப் பொருளைப் பேசியவன் பாரதி. கேட்கா வரத்தை இறைவனிடம் கேட்டவன் பாரதி.

'பேசாப் பொருள்' என்ற தொடருக்கு இரண்டு பொருள் உண்டு. ஒன்று யாரும் பேசாத பொருள். பிறிதொன்று, முக்கியமானது எனினும் யாரும் பொறுப்பு எடுத்துக் கொண்டு பேசாதிருத்தல். முக்கியமான ஒரு செய்தியைப் பற்றி யாரும் கவலைப்படாதிருப்பதால் நாம் ''அதைப் பற்றிப் பேச்சே இல்லையே!'' என்று சொல்கிறோமல்லவா? இந்த இரண்டாவது பொருளிலேயே, ''பேசாப் பொருளைப்'' பேசுகிறான் பாரதி.

எல்லோரும், மனிதர்கள் மட்டுமல்லாது மரம், செடி, கொடி, புல் பூண்டு, பறவை, விலங்குகள் எல்லோரும் வாழவேண்டும் என்பது முக்கியமான ஒரு கருத்து. இதனைப் பலரும் உணர்ந்திருந்தாலும் எத்தனை பேர் இதைப் பற்றிப் பேசுகிறோம்? பாரதி சந்திர மௌலியாகிய சர்வேசுவரனை அழைத்துப் வுள்ளம் பற்றி உன் திருச் செவிகளைத் தாழ்த்திக் கேட்டு, ''அங்ஙனமே ஆகுக''(ததாஸ்து) என்பாய் இறைவா! இந்த வரத்தை இந்த நாள் நீ அருள வேண்டும். அனந்தமான உயிர்களுக்கு நாயகனே! சரணம், சரணம், சரணம்.''

''பேசாப்பொருளைப் பேசநான் துணிந்தேன்
கேட்கா வரத்தைக் கேட்கநான் துணிந்தேன்
மண்மீதுள்ள மக்கள் பறவைகள்
விலங்குகள் பூச்சிகள் புற்பூண்டு மரங்கள்
யாவும் என்வினையால் இடும்பை தீர்ந்தே
இன்பமுற்று அன்புடன்இணங்கிவாழ்ந்திடவே
செய்தல் வேண்டும் தேவதேவா!
ஞானகாசத்து நடுவே நின்று நான்
''பூமண்டலத்தில் அன்பும் பொறையும்
விளங்குக; துன்பமும் மிடிமையும் நோவும்
சாவும் நீங்கிச் சார்ந்த பல்லுயிரெல்லாம்
இன்புற்று வாழ்க என்பேன்!'' இதனை நீ
திருச்செவி கொண்டு திருவுள்ளம் இரங்கி
'அங்ஙனே ஆகுக' என்பாய் ஐயனே!
இந்நாள் இப்பொழுது எனக்கு இவ் வரத்தினை
அருள்வாய்; ஆதிமூலமே அனந்த
சக்தி குமாரனே! சந்திர மவுலீ
நித்தியம் பொருளே! சரணம்
சரணம் சரணம் சரணம் இங்கு உனக்கே!



குழந்தைக்கு 3 மாதமாகும்போது, பால் மட்டும் போதாது

# உங்கள் குழந்தைக்குத் தேவை ஃபாரெக்ஸ்

குழந்தையின் உன்னத திட உணவு

**3-ஆம் மாதம்—திட உணவு துவங்கும் காலம்.**

3 மாதம் ஆனபின், குழந்தையின் வளர்ச்சிக்குப் பால் மட்டும் போதாது. குழந்தை சுறுசுறுப்பாயும் விரைந்தும் வளரும் சமயம்—பாலில் கிடைப்பதை விட அதிக கலோரிகள் தேவை. குழந்தைக்கு திரவ உணவைக் குறைக்கும் வகையிலும் அதிக கலோரிகளை வழங்கவும் மென்றுத் தின்னப் பழகவும் திட உணவு தேவை.

**3-ஆம் மாதம் அதிக இரும்புச் சத்து தேவை**

பிறந்த 2-4 மாதங்கள்தான் குழந்தைக்குத் திட உணவு துவங்க சிறந்த சமயம். பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச் சத்துப் பற்றாக் குறையினால் அது முழுமையாவதில்லை.

ஆகவே, குழந்தைக்கு இரும்புச்சத்து அடங்கிய திட உணவுத்தேவைப் படுகிறது.

—Dr. Subhash C. Arya
"Infant & Childcare for the Indian mother"

**ஏன் டாக்டர்கள் ஃபாரெக்ஸ் சிபாரிசு செய்கிறார்கள்?**

குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப்பட்டது—ஃபாரெக்ஸ். இதில் புரதம், கார்போஹைட்ரேட், கொழுப்பு, கால்ஷியம், பாஸ்பரஸ், மற்றும் வைட்டமின்கள் உள்ளன. இரும்புச் சத்தும் அதிகமுள்ளது—ஃபாரெக்ஸ். ஆகவே, குழந்தையின் விரைந்த முழு வளர்ச்சிக்கு உன்னதமான திட உணவாகிறது—ஃபாரெக்ஸ்.

**இலவசம்! குழந்தையின் முதலாண்டு புத்தகத்திற்கு, 50 பைசா தபால் தலையுடன் எழுதுங்கள்.**

**த.பெ. எண் 19119, பம்பாய்-400025. (FAR-202T)**






டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்

**குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு**

CASGLF-10-203 TAM




✖ திரு. திருநாவுக்கரசு

✖ திருமதி கோமதி சீனிவாசன்

✖ ஷியாம் பெனகல்

## ஃபிலிம் டிவிஷன் படங்கள் மகா தண்டம்!

சில சாதாரண நடப்புக்களையும் சம்பவங்களையும் எடுத்துச் செல்லும் உயிரற்ற படத் தொகுப்பாகத்தான் பிலிம்ஸ் டிவிஷன் டாக்குமெண்டரிகள் இருக்கின்றன. ஒரு டாக்குமெண்டரி தயாரிக்கச் செலவோ 50,000 ரூபாய் முதல் 55,000 ரூபாய் வரை ஆகிறது! ட்ரீட்மெண்ட், கற்பனை, புதிய உத்திகள் இவற்றில் கவனமே போதாது.

எதைப் பற்றிப் படம் எடுக்கவேண்டும் என்பதைப் படம் தயாரிக்கிறவன்தான் முடிவு செய்ய வேண்டுமேயன்றி, 'இதுதான் சப்ஜெக்ட். இதை டாக்குமெண்டரியாகத் தயார் செய்து கொடு' என்று கட்டளை இடக் கூடாது. ஃபிலிம்ஸ் டிவிஷன் ஒரு அரசாங்க இலாக்கா மாதிரிதான் செயல்படுகிறது. துளிக்கூடச் சுதந்திரம் நமக்குக் கிடையாது.

—சண்டே அப்சர்வரில் ஷியாம் பெனகல்
தகவல்: சாருகேசி

## அமைச்சரின் குழந்தை!

அமைச்சர் திருமதி கோமதி சீனிவாசன் கையில் ஏழு மாதக் குழந்தை. இவர் வைத்துள்ள பெயர் காமாட்சி. எம். ஜி. ஆரிடம் கொண்டு போய்க் கொடுத்துப் பெயர் சூட்ட வேண்டும் என்று காத்திருந்தார். தமிழ் வருடப் பிறப்பன்றுதான் எம். ஜி. ஆர். குழந்தைக்குப் பெயர் சூட்டினார். பெயர் பெண்ணரசி.

வெளியூர்களுக்குப் போகையில் குழந்தையையும் கூடவே அழைத்துக் கொண்டு போகிறார்.

இது இரண்டாவது குழந்தை. முதலாவது பையன். எலக்ஷனுக்கு ஒரு மாதம் முன்னால் ஒரு விபத்தில் இறந்து விட்டான். பெயர்: சீகோ காரல் மார்க்ஸ் ஆல்பிரட் டிவின் கம்போடியா. பல புத்தகங்களையும் புரட்டி அதி புத்திசாலியாய்ப் பையன் வர வேண்டும் என ஆசைப்பட்டுச் சூட்டிய புதுமையான பெயராம். பையனும் ரொம்ப சூட்டிகையாம். 'ஆனால் நாங்கள் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்' என்கிறார் மிகவும் வருத்தத்துடன்.

—எஸ். சந்திரமௌலி

## "இந்தியாவில் பாட்னு இல்லை!"

"அக்கரைச் சீமையில் ஆறு வாரங்கள்" என்று ஒரு நூல் எழுதியிருக்கிறார் தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு. (வானதி பதிப்பகம், சென்னை-17)

அதில் சுவையான இரு செய்திகள்:

அக்கரைச் சீமையில் சில நாடுகளில் நாடாளுமன்ற அங்கத்தினர்களுக்குத் தங்கள் தொகுதிக்குப் பணியாற்ற பட்ஜெட்டிலேயே தொகை ஒதுக்கப்படுகிறது! தங்கள் தொகுதி அபிவிருத்திக்கென அவர்கள் இந்தத் தொகையைச் செலவழிக்கத் திட்டம் வகுக்கலாம். இங்கே அது இல்லை என்பது மட்டுமல்ல; இது போன்ற விஷயத்தில் இங்கு ஊராட்சி மன்றத் தலைவருக்கு உள்ள அதிகாரம் கூட நாடாளு மன்ற உறுப்பினருக்கு இல்லை என்பதை அமைச்சர் விசனத்தோடு குறிப்பிடுகிறார்.

ஆஸ்திரேலியாவிலிருந்து பாட்னுவுக்குப் போன் போட்டுப் பேச எண்ணுகிறார், அமைச்சர் திருநாவுக்கரசுடன் சென்ற பீகார் மாநில சட்ட மன்றத் தலைவர். பம்பாய் தொலைபேசி நிலையம் மூலமாகத்தான் பாட்னுவுடன் தொடர்பு கொள்ள வேண்டும். பம்பாய் தொலை பேசி நிலையத்துடன் ஆஸ்திரேலிய தொலை பேசி நிலையம் தொடர்பு கொண்டபோது பம்பாய் நிலையத்தைச் சேர்ந்த ஒருவர், "இந்தியாவில் பாட்னு என்ற ஒரு நகரமே கிடையாது" என்று கூறிவிட்டாராம்! அழகாயிருக்கிறதல்லவா!

# அக்னித்தவம்



**ப**லார்ஷா ரயில் நிலையத்தில் தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் பிரயாணிகளுக்குத் தேவைப்பட்ட சாப்பாட்டுத் தட்டுக்களையெல்லாம் சமையல் கம்பார்ட்மெண்ட் சிப்பந்திகள் உள்ளே எடுத்து அடுக்கி வைத்து விட்டார்கள். ரயில் அங்கு நிற்பதன் அடிப்படை நோக்கமே சாப்பாடு விநியோகத்துக்காகத்தான். பலார்ஷாவை விட்டுப் புறப்பட்டால் இரவு ஒன்பதரைக்கு ரயில் நாக்பூரில்தான் நிற்கும். ஓடும்போதே, ரயிலில் சமையல் கம்பார்ட்மெண்ட் சிப்பந்திகள் சாப்பாட்டுத் தட்டுக்களை விநியோகித்து விடுவார்கள்.

ஐந்து மணிக்கு ஏற்றப்படும் இந்தச் சாப்பாடு எட்டு மணி அளவில் ஆறித்தான் போகும்! அதற்கு என்ன செய்வது?

மணிதான் ஓடிக் கொண்டிருந்ததே தவிர வண்டி ஓடும் வழியைக் காணோம்.

பிளாட்பாரத்தில் நடை பழகிக்கொண்டிருந்தவர்கள் மூலம் நாக்பூர் நோக்கிப் போய்க் கொண்டிருந்த கூட்ஸ் வண்டித் தொடரில் ஒரு பகுதி தண்டவாளத்திலிருந்து இறங்கி விட்டதாம். அந்தத் தடையைச் சரி செய்த பிறகுதான் தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் பலார்ஷாவுக்கு 'டாட்டா' சொல்லிவிட்டுக் கிளம்புமாம்!

காற்று இதமாக இருந்தது. ஐந்தாறு கம்பார்ட்மெண்டுகளைத் தாண்டி நடந்தேன்.

சமையல் கம்பார்ட்மெண்டிலிருந்து வெங்காயம் எண்ணெயில் வேகும் நறுமணம் குப் என்று வந்தது. மசால்வடை தயாரிப்பாக இருக்கலாம். அந்த மணத்தை ரசித்துக் கொண்டே அந்தக் கம்பார்ட்மெண்டை ஒட்டி நடந்தபோது உள்ளே பனியன் துண்டுடன் ஒரு பக்கமாக உட்கார்ந்து வெற்றிலையில் சுண்ணாம்பைத் தடவிக் கொண்டிருந்த நபரின் முகம் என் மனத்தில் பளிச் சென்று பதிந்தது. எங்கோ பார்த்த முகம்!

ஜன்னல் பக்கத்தில் போய் நின்று அவர் பார்வை என்மீது திரும்பியதும் ''நீங்க சிவகெங்கை ஹைஸ்கூலில் படிச்சவங்களா? பார்த்த முகமா இருக்கு...'' என் தயக்கத்தை வார்த்தைகளாக மாற்றி விட்டேன்.

அந்த ஆசாமி சட்டென்று பதில் சொல்லிவிடவில்லை. பதிலுக்கு என்னை உற்றுப் பார்த்தார். பிறகு இதமான புன்சிரிப்புடன் ''ஆமாம்!... செட்டி ஊரணிக் கரையில் நடந்தது நினைவுக்கு வருதா?... ஐம்பது வருஷம்... அரை நூற்றாண்டு ஓடியிருக்குமே'' என்றவுடன் என் உள்ளத்தில் ஒரே குதூகலம். நான் ஐம்பது ஆண்டுகள் வயதில் குறைந்துவிட்ட குஷி!

''மிஸ்டர் ராமநாதன்! அன்றைக்குச் செட்டி ஊரணிக்கரை பஞ்சு ஐயர் காப்பி ஓட்டலுக்குப் பின்னாலிருந்த மாமரத்திலே நீங்க கல் எறிஞ்சீங்க! விழுந்த இரண்டு மாங்

காய்களைநான் எடுத்துக்கிட்டுத்தரமாட்டேன்னேன். நாம் சண்டை போட்டுக் கட்டிப் புரண்டோம். நீங்க ஊரணிப் பக்கம் உருண்டு விழுந்தீங்க! நல்ல வேளை தண்ணி இல்லே!''

ராமநாதன் கையை அமர்த்தினார். ''இன்னும் அந்த மாங்காய்கள் எனக்குக் கிடைக்கவில்லே! இனிமேல் அவசியம் இல்லே'' என்று அவர் சொன்னபோது அதன் பொருள் எனக்குப் புரியவில்லை. ஆனால் அந்தக் குரலில் ஒலித்த வேதனை எனக்குப் புரிந்தது.

''ராமநாதன்! அந்த வருஷத்துக்கு அப்புறம் நான் ஸ்கூலில் உன்னைப் பார்க்கலே! ஒற்றைத் தெருவிலே நீ இருந்த வீட்டிற்கு வேறு யாரோ குடித்தனம் வந்துவிட்டார்கள்.... படிப்பை நிறுத்திட்டியா... இந்த ரயில்வே இலாக்கா சமையல் பகுதிக்கு எப்படி வந்தே?''

''படிப்பை நிறுத்தவா?... தொடர்ந்து படிச்சேன்! நிறையப் படிச்சேன்! வேறே வேறே ஊர்களிலே! என் தகப்பனாரே ராமநாதபுரம் தாலுகா ஆபீசுக்கு மாற்றிவிட்டதாலே குடும்பம் இடம்பெயரவேண்டி வந்தது. கெமிஸ்ட்ரியிலே எம். எஸ். ஸி. பஸ்ட் கிளாஸ் சோமு! இன்னும் இரண்டொரு வருஷங்களில் ஓய்வு பெறும் காலம் வரும். அதுவரை நான் சாதாரண பத்தி, போண்டா போடும் சரக்கு மாஸ்டராகவே ரயில்களில் போய்க் கொண்டிருக்க விரும்புகிறேன். இன்னொரு விஷயம். நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளவில்லை. அதனால் எனக்குப் பிரச்னைகளில்லே.''

எனக்குப் பிரமிப்பிலிருந்து விடுபடப் பல கணங்கள் ஆயின. ''எம். எஸ்.ஸி. பட்டத்தை முதல் வகுப்பில் வாங்கிவிட்டுக் கரி அடுப்பு முன்னும் காஸ் அடுப்பு முன்னும் காய்ந்து காய்ந்து காலத்தை ஓட்ட உனக்குத் துணிவு நிறைய இருந்திருக்க வேண்டும். அந்தத் துணிவை ஏற்படுத்த உன் வாழ்வில் ஏதாவது சம்பவம் நடந்திருக்க வேண்டும். அதை நான் தெரிந்து கொள்ளலாமென்றால் சொல்''

ராமநாதன் கொஞ்சம் தணிந்த குரலில் பேசத் தொடங்கினான்.

''திருச்சியில் இண்டர்மீடியட்டும் பி.எஸ்.ஸி.யும் படித்து முடித்தேன். கல்லூரியில் எனக்கு ஸ்காலர்ஷிப் கிடைத்தது. எம் எஸ்ஸியும் படித்து முடித்தேன்.

பட்டம் வாங்கியதும் ஒரு கல்லூரியில் டெமான்ஸ்ட்ரேட்டர் உத்தியோகம் கிடைத்தது. எந்த ஊர், எந்தக் கல்லூரி என்று சொல்லத் தயாரில்லை. மூன்று வருடங்களில் லெக்சரர் ஆக்கப் பட்டேன். ஆண்கள், பெண்கள் சேர்ந்து படிக்கும் கல்லூரி.

இத்தனை நாட்கள் என் படிப்பிலும், பிறகு என் பாட போதனையிலும் லயித்திருந்த நான் வேறு திசையில் என் சிந்தனை போவதை உணர்ந்தேன். அதற்குக் காரணம் அந்த ஆண்டில் என் வகுப்பு மாணவியாக வந்து சேர்ந்த டல்லி.

முதல் தடவையாக நாங்கள் மனம் விட்டுப் பேசியபோது அவள் சொன்னது:

# கோமதி சுவாமிநாதன்



''நீங்கள் அவசியம் என் வீட்டுக்கு வர வேண்டும். அப்பாவிடம் உங்களை அறிமுகப் படுத்த விரும்புகிறேன்.''

டல்ஸி ஞான வரத்திடம் ராமநாதன் பரமேஸ்வரன், பாட சம்பந்தமில்லாமல் பேசிய முதல் வார்த்தைகள். ''மிஸ் ஞான வரம்! அந்த அறிமுகத்துக்கு என்னைத் தகுதி யாக்கிக்கொள்ள அவகாசம் தேவை. நம் வருங்காலச் சந்ததிகள், ஒருவேளை அந்த அதிருஷ்டம் இருந்தால், நாம் அவசரப் பட்டுவிட்டோமோ என்ற குற்றச்சாட்டை வீசாமல் இருக்க வேண்டுமே என்பதற்காகத் தான் யோசிக்க விரும்புகிறேன்.... இன்றைய இன்ப நினைவிலேயே இன்னும் சிலகாலத்தைப் போக்கலாமே.''

இவ்வளவுதான் நான் பேசினேன். அவள் போய்விட்டாள்.

அன்று பிற்பகல் நடந்த சம்பவம்அப்புறம் எனக்கு அவகாசம் தேட வேண்டிய அவசியமே இல்லாமல் செய்து விட்டது.

பிற்பகல் டல்ஸிக்கு ரசாயனப் பரிசோதனை வகுப்பு இருந்தது. கந்தக அமில சம்பந்தப் பட்ட பரிசோதனை. எனக்கு அந்த நேரத்தில் பரிசோதனைக் கூடத்தில் வேலை இல்லை. வராந்தா வழியாக நடந்து கொண்டிருந்த நான் ஜன்னல் பக்கத்தில் ஒரு கணம் நின்றேன், அவளைப் பார்க்க.

அவளும் என்னைப் பார்த்தாள். ஆனால் அதே நேரத்தில் அவள் படபடப்புக்கு ஆளானவள் போல் சட்டென்று மறு பக்கம் திரும்பினாள். அவள் இடது கையிலிருந்த அமிலப் பாட்டில் மேஜையின் மீது விழுந்து சிதறியது. டல்ஸி அலறிக் கொண்டே முகத்தில் கையை வைத்துக் கீழே உட்கார்ந்தாள்.

அப்புறம் என்ன? ஆஸ்பத்திரியில் மூன்று மாதங்கள் இருந்தாள். நல்ல வேளையாகக் கண்கள் தப்பித்தன. ஆனால் முகத்தின் ஒரு பகுதி ரணமாகி விட்டது. பயங்கர பாண்டேஜ்.

இந்தச் சம்பவம் நடந்து ஒரு வார காலத்தில் அவளுக்கு ஆறுதல் சொல்ல ஆஸ்பத்திரி போயிருந்தேன்.

''அன்று அவகாசம் தேவை என்று குறிப்பிட்டதும் எல்லாம் புரிந்து போயிற்று. நீங்கள் பயந்து ஒதுங்க நினைத்தீர்கள். சமூகக் கட்டுப்பாடுகளுக்குப் பயந்து சாக்குச் சொன்னீர்கள். அப்போது தோன்றிய கோபம் என்னை அளவு கடந்த படபடப்புக்கு உள்ளாக்கியிருந்தது. அதன் விளைவுதான் ஜன்னல் வழியாக உங்களைப் பார்த்தபோது உணர்ச்சி வசப்பட்டு பாட்டிலின் பிடியை நழுவ விட்டேன். அதோடு என் கனவுகள்,கற்பனைகள் எல்லாமே நழுவி விட்டன! இப்போது பாருங்கள்! இனிமேல் எந்த விதமான பைத்தியக்கார ஆசைகளையும் வளர்க்க என் முகம் இடம் கொடுக்குமா? என்னை மணந்து கொள்வதாய் இனி நீங்கள் சொன்னாலும் அனுதாபத்தால் பேசுவதாகவே எனக்குத் தோன்றும். எனக்குப் படிப்பும் போதும், பருவத் துடிப்பும் போதும். தயவு செய்து எனக்கு ஆறுதல் சொல்ல முயல வேண்டாம். வருங்காலத்தில் எப்போதாவது ஒரு ரயில்வே சந்திப்பில் உங்களை உங்கள் குடும்பம், மனைவி குழந்தைகளுடன் நான் சந்திக்க நேரிடலாம்! அப்போது அவர்களுக்கு என்னை யார் என்று அறிமுகப் படுத்துங்கள். அதற்கு உங்களுக்கு நிறைய அவகாசம் இருக்கிறது.''

அட்டைப்பட அழகிகளின் பெயர்கள் :

**கலா**
**கவிதா**
**கல்பனா**

அந்த ஆஸ்பத்திரிக் கட்டிலுக்குப் பக்கத்தில்தான் நான் முடிவெடுத்தேன். இந்த ஜன்மத்தில் எனக்குக் கல்யாணம் கிடையாதென்று! அடுத்த இரண்டு நாட்களில் வேலையை ராஜினாமாச் செய்துவிட்டேன்.

டல்ஸிக்குக் காயம் ஆறலாம். வடுக்கள் மிஞ்சலாம்! ஆனால் என் மனக் காயம் ஆறாது. அவள் உஷ்ண வேகத்தால் பட்ட கொஞ்ச கால அவதியை நான் நிறையப் பட வேண்டும் என்று முடிவு செய்தேன். ரொம்ப தூரம் தள்ளிய ஊர் ஒன்றில் ஒட்டல் சரக்கு மாஸ்டர்உதவியாளராகச் சேர்ந்தேன். அடுப்பின் சூடு என்னை எப்போதும் டல்ஸியின் துடிப்பைஞாபகப்படுத்திக்கொண்டிருக்குமே!

சரக்கு மாஸ்டரானேன். அறிமுகமான ஒரு புது நண்பர் என்னை ரயில்வே இலாக்காவில் நுழைத்து விட்டார். அதற்கு எஸ். எஸ். எல். ஸி. சர்ட்டிபிகேட் உதவியது. போதுமே!

''ராமநாதன்! நீ பல வருஷங்களாய் அக்கினித் தவமே செய்து கொண்டிருக்கிறாய்! அந்த டல்ஸி ஒரு போலீஸ் அதிகாரியின் மகளா? நினைவிருக்கிறதா?'' என்றேன்.

'ஆம்' என்பதற்கு அடையாளமாகத் தலை ஆட்டினான்.

''சில காலம் அந்த விபத்துக்குப் பிறகு வெளி நாட்டில் போய்த் தங்கியிருக்கிறாள். சிங்கப்பூர் என்று நினைக்கிறேன். முகத்தின் ரணங்கள் எல்லாம் விசேஷ சிகிச்சையால் சீர்செய்யப்பட்ட பிறகு உறவிலேயே அவளுக்குத் திருமணம் நடந்தது.

''அவள் மகளும், என் மகனும் சில ஆண்டுகளுக்கு முன்பு முசோரியில் ஐ.ஏ.எஸ். பயிற்சிக்குப் போயிருந்த நேரத்தில் ஒருவரிடம் ஒருவர் ஈடுபாடு கொண்டு திருமணமே செய்து கொண்டு விட்டார்கள். இருவருமே தங்கள் பெற்றோருக்கு அப்புறம்தான் தெரிவித்தார்கள்.

''திருமதி டல்ஸி இப்போது என் சம்பந்தி. ஸ்டேட்ஸில் தன் மகனுடன் தங்கியிருப்பதாகத் தகவல். என் மகனும் மருமகளும் ராஜஸ்தான் மாநில அரசில் பணியாற்றுகிறார்கள். நான் இப்போது ஜெய்ப்பூருக்குத்தான்போய்க்கொண்டிருக்கிறேன்.''

ராமநாதன் கண்களிலிருந்து நீர் பொங்கி வழிந்தது. துடைத்துக் கொண்டான்.

''சோமு! ரொம்ப தாங்ஸ்! அவள் மகிழ்ச்சியாக இருக்கிறாள் என்பதைக் கேட்கும்போது எனக்குப் பரம மகிழ்ச்சி!... இப்பவும் மாங்காய்கள் உனக்குத்தான்.... எனக்கு... நோ! நோ! அதன் விளைவாக எனக்கு ஆனந்தம் கிடைத்திருக்கிறதே!''

இனி ஒவ்வோரு ஆண்டும்...
கோடைக் காலத்தைத் தேடி
ஓடுவீர்கள்!

# அதிகக் காற்று வீச்சு

# குறைவான மின்சக்தி செலவு

அதிக காற்று வீச்சுக்கென விசேஷமான
கோணத்தில் தட்டி அமைக்கப்பட்ட பிளேடு
களைக் கொண்டது பஜாஜ் மின்விசிறிகள்.
கூடவே குறைவான மின்சக்தி செலவுக்கென
உறுதியான மோட்டார். அது மட்டுமா? எந்த
இடத்துக்கும் ஏற்ற எழில் மிகு ரெகுலேட்டர்.

பல சைஸ்களிலும் ரகங்களிலும் வருகின்றன.
பஜாஜ் மின்விசிறிகள் உயர்ந்த தரமிகு
உறுப்புக்களால் அமைந்தவை. கடுமையான
பஜாஜ் விதிகளுக்கேற்ப உருவானவை. சீரிய
விற்பனைக்குப்பின் சேவைக்கென
இந்தியாவெங்கும் 3500க்கும் மேற்பட்ட
விற்பனையாளர்கள படையைப் பின் பலமாகக்
கொண்டவை. இது போன்ற காரணங்
களாலேயே மின் சாதனங்களில் மிக
நம்பகமானதெனப் பெயர் பெற்றுள்ளது பஜாஜ்.

சிறந்ததையே bajaj பஜாஜ்
வாங்குவீர் வாங்குவீர்

Heros'-BE-595 TAM

ஆகவ மல்லனை ஒரு துரோகி எனத் தீர் மானித்து விஜயாலயன் அவனைப் பாதாளச் சிறையில் அடைத்த விவரத்தை மறுநாள் மகனிடமிருந்தே அறிய வந்தார் 'மன்னர் குமாராங்குசன். அன்றிரவு கைதியைக் காண அவர் சிறைக்கூடம் சென்றார். அங்கே முன் வாசலை அடுத்த ஓர் அறையில் இருக் கையில் அமர்ந்து கொண்டு சிறை அதிகாரியை அனுப்பி ஆகவ மல்லனை அவனது கொட்டடி யிலிருந்து அழைத்து வரச் செய்தார்.

மன்னரைக் கண்டதும் நேற்று வரை ஒற்றர் தலைவனாகப் பெரும் செல்வாக்குப் பெற்றிருந் தவன் அவர் காலில் விழுந்து வணங்கிய துடன், தாரை தாரை யாகக்கண்ணீர் உகுத்து விசும்பி அழவும் ஆரம்பித்து விட் டான். சுற் றும் முற் றும் பார்த்த மன்னர் அனை வரையும் வெளியே இருக்கு மாறு சைகை காட்டினார்.

''மன்னவா, இவன் ஆபத் தான கைதி'' என்றான் சிறைக் கூடத் தலைவன்.

''துரோகியும் கூட'' என் றான் குமாராங்குசனின் மெய்க் காவலன்.

''அறிவேன்; எச்சரிப்பது உங்கள் கடமை, உணர்கி றேன். ஆயினும் என் கட் டளை, நாங்கள் தனித்து விடப் பட வேண்டும் என்பதே'' என்றார் குமாராங்குசன்.



அவர்கள் வெளியேற, அவர்களின் ஏச்சைக் கேட்டு முன்னிலும் அதிகமாக அழுத ஆகவ மல்லனைப் பார்த்து,

''இப்போது வருந்தி என்ன பயன்?' உயர் பதவிக்கு ஆசைப்பட்டு பாராசிரயனின் பல்லவ மாளிகைக்கு நீ போய் வருவதற்கு முன்பே அதன் பின் விளைவு பற்றி நீ சிந்தித்திருக்க வேண்டும்'' என்றார் குமாராங்குசன்.

''பிரபோ! என்னை நம்புங்கள்'' என்று தழுதழுத்த குரலில் பேசினான் ஆகவ மல்லன். ''நான் அங்கே போகும்போதுகூட பல்லவ மாதண்ட நாயகரிடமிருந்து தங்களுக்குத் தேவைப்படும் தகவல் ஏதும் கிடைக்குமா பார்க்கலாம் என்ற கருத்தில்தான்சென்றேன். ஆனால் அங்கு போன பிறகு, அவரது வளமான வாழ்க்கையைக் கண்டும் ஆசை வார்த்தைகளைக் கேட்டும் என் மனம் தடுமாறிவிட்டதும் உண்மைதான். மன்னவா! உப்பிட்டவனுக்குத் துரோகம் எண்ணிய எனக்கு எந்தத் தண்டனையும் போதாது. ஆனாலும் கெஞ்சிக் கேட்கிறேன், ஒரே ஒரு வாய்ப்புக் கொடுங்கள். என் ராஜ விசுவாசத்தை நிரூபிக்கிறேன்.''

''உன்னை எப்படி நம்புவது?'' என்றார் குமாராங்குசன்.

''அரசே! நான் என்ன செய்தால் நான் மனம் வருந்தித் திருந்தி விட்டதை உங்களுக்கு நிரூபிக்க முடியும்? அதை நீங்களே சொல்லுங்கள் செய்து காட்டுகிறேன்!''

குமாராங்குசன் சற்று யோசித்துவிட்டு, நிதானமாக, ''ஒரு காரியம் நீ செய்யலாம்.'' என்றார்.

''பிரபோ! என்ன அது? சொல்லுங்கள்!'' என்று பரபரத்தான் ஆகவ மல்லன்.

''என் மகனைச் சதா தம் கண்காணிப்பில் வைத்திருக்கிறார் பாராசிரயன். விஜயாலயனோ பழையாறையை விட்டு வெளியேறிச் சில காரியங்களைச் சாதிக்க எண்ணுகிறான். ஆனால் இவன் வேட்டையாடப் போனால் கூட பாராசிரயனின் அனுமதி பெற்றுத்தான் போக வேண்டும் என்பது போன்ற ஓர் அவலமான சூழ்நிலையில் சோழ நாடு சிக்கியிருக்கிறது. பல்லவரது மேலாதிக்கம் அத்தனை கடுமை...''

''பிரபோ! இளவரசர் பழையாறையை விட்டுப் பாராசிரயனுக்குத் தெரியாமல் வெளியேறிச் சில பல நாட்களுக்குப் பிறகு திரும்ப வேண்டும் என்றால் அதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது.''

''என்ன அது?''

''அவர் பழையாறையை விட்டு மாறுவேடத்தில் சென்றாலும் இங்கே இளவரசனாக மாறுவேடம் அணிந்த ஒருவன் வளைய வந்து கொண்டிருக்க வேண்டும்!''

'என் மனத்தில் இருப்பதை அப்படியே சொன்னாய்!''

''மன்னவா! இந்த அளவுக்குக் கூடச் சிந்திக்க முடியாதவன் தங்கள் ஒற்றர் தலைவனாக எப்படிப் பதவி பெற்றிருக்க முடியும்?.. அரசே! நானும் இளவரசரும் ஏறத்தாழ ஒரே ஆகிருதி உடையவர்கள். மேலும் அவர் முகத்தின் பெரும் பகுதியும் வலது கண்ணும் எப்போதும் மறைக்கப்பட்டே உள்ளன. அவரைப் போல் வேடமணிவதும் நடிப்பதும் எனக்கு எளிது.''

''உன் மனம் தூய்மை அடைந்து விட்டதாக நம்ப நான் துணிகிறேன். மேலும் இங்கு நீ எப்போதும் என் மேற் பார்வையில் இருப்பாயாதலால், நீ காட்டிக் கொடுத்து விடுவாயோ என்ற கவலையின்றி விஜயாலயன் சென்று தன் பணிகளை முடித்துக் கொண்டு திரும்பலாம். ஆனால்...''

''ஆனால் என்ன ஐயனே?''

''ஒரே ஒரு தயக்கம். இளவரசன் வேடத்தில் நீ இருக்கும்போது தப்பித் தவறி உன் தலையலங்காரம் கலைந்தால் வலக் கன்னத்தில் தீப்புண் வடுக்கள் உள்ளனவா இல்லையா என்று பாராசிரயனின் கழுகுக் கண்கள் கவனிக்கலாம்.''

ஆகவ மல்லன் கணப் பொழுதும் தாமதியாமல், சுவரில் பொருத்தப்பட்டு எரிந்து ஒளி கொடுத்துக் கொண்டிருந்த ஒரு தீப் பந்தத்தைச் சரேலென உருவி எடுத்து அதனால் தன்னைத் தானே சுட்டெரித்துக் கொண்டான். தீ நாக்குகள் அவன் வலப்புறக் கன்னத்தையும் காதையும் தலைக் கேசத்தையும் தீய்த்துக் கருகச் செய்தும் விட்டன! பல்லைக் கடித்துக் கொண்டு ஒரு சிறு முனகல் சத்தம் கூட எழுப்பாமல் வேதனையைத் தாங்கிக் கொண்ட ஆகவ மல்லன்ஒரு கட்டத்துக்கு மேல் அந்தத்துன்பத்தைத் தாங்க மனமிருந்தும் உடல் சக்தி அற்றவனாகிச் சுருண்டு மன்னரின் காலடியில் விழுந்து புரண்டான்.



மயக்கமடையுமுன் கடைசியாக அவன் கூறிய வார்த்தைகள்: ''மன்னவா! கொடிய தண்டனையை எனக்கு நானே விதித்துக் கொண்டேன். இதன் பிறகேனும் இளவரசர் என்னை மன்னித்துத் தாளுக வேண்டும்!''

தீப்பந்தம் தரையில் உருண்டது. அதை எடுத்து மறுபடியும் சுவரில் உரிய இடத்தில் பொருத்திய குமாராங்குசன் கைதட்டி. மெய்க்காவலன் வந்ததும், ரகசியம் காக்குமாறும் கையோடு விஜயாலயனையும், அரண்மனை வைத்தியரையும் குவளையையும் அழைத்து வருமாறு பணித்தார்.

சோகமானதும் பயங்கரமானதுமான இந்த நிகழ்ச்சியை இப்போது அராபிய வியாபாரி வேடத்தில் இருந்த விஜயாலயன் தனது அருமை நண்பன் ஜெயசிங்கனுக்குக் கூறி முடித்தான்.

அவர்கள் ஒரு விசாலமான மைதானத்தில் குதிரைகளுக்குப் பயிற்சி அளித்து முடித்திருந்தனர். புரவிகள் அழுத்தமாகக் கால்களைப் பதித்து நடந்தன. குதி நடை போட்டு மெல்ல ஓடின. பிறகு நாலு கால் பாய்ச்சலில் அதி வேகம் காட்டின. வேலிகளை உயரம் தாண்டின. ஆறு குளங்களை அகலம் தாவின. இப்போது நுரை தள்ளும் வாயுடன் ஓய்வு கொண்டன. நண்பர்களுக்கும்தான் மூச்சிரைத்தது.

ஒரு மரத்தினடியில் பசும் புல் தரையில் களைப்பு மிகுதியால் கால் நீட்டிப் படுத்து நிழலையும் காற்றையும் வரவேற்ற அவர்கள் சற்று நேரம் சென்று எழுந்து கால்களைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்தார்கள். குதிரைகள் கண் பார்வையில் பசியாறப் புல் மேய்வதையும் தாமரைக் குளத்தில் நீர் அருந்துவதையும் அவ்வப்போது கவனித்துக் கொண்டே தங்கள் தனிமை அளித்த துணிவில் மனம் விட்டுப் பேசினார்கள்.

> "என்ன சார் உங்க பையன் தானுகவே கேள்வி கேட்டுக்கருன் தானுகவே பதில்சொல்லிக்கிருன் என்ன ஆச்சு?"
> "அவன் நல்லாத்தான் சார் இருந்தான். டிவி.க்காகப் பேட்டி எடுக்கறேன்னு அலைஞ்சு இப்படி ஆயிட்டான்!" - பாதுஷா



குவளையின் பச்சிலை மூலிகை அறிவும் அரண்மனை வைத்தியரின் ஆற்றலும் இணைந்து சீக்கிரமே ஆகவமல்லனின் ரணங்களை ஆற்றியதை எடுத்துரைத்த விஜயாலயன், குவளையைப் பற்றியும், அவளைத் தான் சந்தித்து அன்பு செலுத்தியது குறித்தும் விரிவாகக் கூறினன்.

அனைத்தையும் அடங்காத ஆச்சரியத்துடன் கேட்டுக் கொண்ட ஜெயசிங்கன், ''பிரபோ! ஆகவ மல்லன் தனக்குத் தானே தருவித்துக் கொண்ட இந்தத் துயரத்தில் வலக் கண் பார்வையை இழந்தாஞ?'' என்று கேட்டான்.

''இல்லை. ஆனல் வலக் கண் மீதாக என்னைப் போலவே சதுரமானதொரு துணிப் பட்டை அணிந்திருக்கிறன். அது விலகுவதற்கான சாத்தியக் கூறுகள் மிகவும் குறைவு. என்றாலும் சிறிதளவு அபாயம் அதில் இருக்கத்தான் செய்கிறது.''

''இளவரசே! உங்களுடைய குழி விழுந்த கண் மறுபடி எவ்வாறு பார்வையைப் பெற்றது? அதுவும் உங்கள் குவளையின் கூர்மதி கொடுத்த பரிசா?''

விஜயாலயன் சிரித்தான். ''குவளை திறமைசாலிதான். ஆனல் அவளாலும் அப்படி ஓர் அற்புதத்தைச் சாதிக்க முடியாது. நான் வலது கண்ணைத் திரும்பப் பெற்றுள்ளேனே தவிர அதில் பார்வை கிடையாது. இது ஒரு மான் குட்டியின் கண்!''

''அப்படியா!'' என்று அளவற்ற வியப்புடன் வினவிய ஜெயசிங்கன், விஜயாலயனின் முகத்தைக் கூர்ந்து நோக்கினன். ''நீ விபத்தில் குழி விழுந்திருந்த இடத்தில் பொருத்தப்பட்ட மாற்றுக் கண் என்று யாருமே நம்ப மாட்டார்கள்!''

''ரண சிகிச்சை செய்த அரண்மனை வைத்தியர் சிவநேசருக்கும் மூலிகை மருந்துகளை வைத்துக் கட்டுப் போட்டுச் சில நாட்களுக்கு என்னை அல்லும் பகலும் கவனித்துக்கொண்ட குவளைக்கும் உன் பாராட்டு போய்ச் சேருகிறது.''

பிரபோ! எல்லாமே கேட்கக் கேட்க வியப்பாக இருக்கிறது... இனி உங்கள் உத்தேசம் என்ன?''

''ஜெயசிங்கா! என்னைச் கணவனுக ஏற்க உத்தமசீலி மறுத்ததால் எனக்கு ஏற்பட்ட அவமானமும் ஏமாற்றமும் தாபமும் கூடவே பெருக்கெடுக்கும் காதலும் எவ்வளவு என்பதை உனக்கு விவரமாகக் கூறிவிட்டேன். அத்தனையும் கேட்டுக் கொண்ட பின் என் உத்தேசம் என்ன என்று கேட்கிருயே!''

''பிரபோ! அப்படியானல் தாங்கள் முத்தரையர் மீது போர் தொடுக்கப் போவது நிச்சயம் என்று சொல்லுங்கள்!''

''சந்தேகமில்லை ஜெயசிங்கா! ஆனல் அதற்கு முன் என் திட்டங்கள் சில தடங்கலின்றி நிறைவேற வேண்டும். குவளையையும் சினனையும் பாண்டி நாட்டுக்கு அனுப்பி இருக்கிறேன். என் சார்பில் அவர்கள் மேற்கொண்டுள்ள ஒரு தந்திர முயற்சி வெற்றி பெற வேண்டும். நான் தஞ்சைக்கு வந்த காரணம் அதேசமாகநல்லபடியாக முடிந்தமாதிரிதான்.

இந்நகரின் பாதுகாப்பில் முத்தரையர் சிறிது கூடக் கவனம் செலுத்தவில்லை என்பதையும் அரண்கள் பலவீனமாக உள்ளன என்பதையும் போர்ப் பயிற்சியில் அதிகமாக ஈடுபடாத வீரர்கள் தளர்ந்து போயிருக்கிறார்கள் என்பதையும் புரிந்து கொண்டிருக்கிறேன். பெரும்பாலும் விவசாயத்தில் ஈடுபட்டுள்ள மக்களும் யுத்தம் பற்றிய சிந்தனையே இன்றி ஆடல் பாடல்களில் ஈடுபட்டுச் சுக வாழ்க்கை நடத்துகிறார்கள் என்பதையும் கண்டு கொண்டேன். இனி உன் உதவியுடன் சந்திரலேகைக்கும் சென்று முத்தரையரின் தலைநகரையும் நோட்டம் விட்டு விட்டால் போதும்.''

''என் உதவியுடனா?''

''பின்னே. நீ இல்லாமலா? பதினெண் பூமி வணிக நகரத்தான் என்கிற முறையில் நீதானே இந்த அராபியக் குதிரை வியாபாரியை முத்தரையருக்கு அறிமுகப்படுத்த வேண்டும்? மொழி பெயர்ப்பாளனாக இருந்து உதவ வேண்டும். உன்னை அவருக்குத் தெரியுமல்லவா?''

''விலை உயர்ந்த பொருட்களில் வாணிபம் செய்யும் நான் அரண்மனையில் வாழ்வோருக்கும், அரசாங்க உயர் அதிகாரிகளுக்கும் அறிமுகமாகாதிருக்க முடியுமா?''

''அப்படித்தான் நானும் கணித்து நம் பிக்கையுடன் புறப்பட்டு வந்தேன். எதிர்பார்த்தபடியே உன் பெயரைச் சொன்னதும் தஞ்சையில் வாயில் காப்போர் எனக்கு ஏக மரியாதை காட்டினார்கள். சந்திரலேகையிலும் உன் செல்வாக்குச் செயல்படாமலா போய்விடும்?''

''சக்தியோடு செயல்படும் இளவரசே... ஆனால்....''

''ஆனால்...?''

''விஜயாலயனாகவே ஓர் இளவரசனுக்குரிய வரவேற்பை முத்தரையனிடம் நீங்கள் பெற்றால் பிறகு அவன் மீதே போர் தொடுப்பது சிநேகத் துரோகமாகிவிடும் என்பதால்தானே தாங்கள் மாறு வேடத்தில் இங்கு வந்து உளவறிகின்றீர்கள்?''

''உம்...''

''அவ்வாறிருக்க நான் மட்டும் எப்படி முத்தரையனுக்குத் துரோகம் இழைக்க முடியும்?''

'விசுக்'கென்று எழுந்தான் விஜயாலயன். உடம்பெல்லாம் கோபத்தில் பதற. ''ஜெயசிங்கா! நீதானா இப்படிப் பேசுகிறாய் சீச்சீ!'' என்றவன் அதற்கு மேல் ஏதும் கூறவே விருப்பமில்லாதவன் போல் திரும்பி நடக்க ஆரம்பித்தான்.

''இளவரசே! சற்றுப் பொறுங்கள்! நான் அறியாமையால் உளறியிருந்தால் திருத்த வேண்டியது உங்கள் கடமை. கோபத்தைத் தவிர்த்து எனக்குப் புத்தி புகட்டுங்கள். நான் தங்களுக்கு உதவ வேண்டியதை நியாயப்படுத்துங்கள்.''

சரேலெனத் திரும்பியபோது அராபியத் தலையலங்காரத் துணியானது குடை விரித்தாற் போல் பறந்தது. ''நீ பிறந்த மண் பழையாறை. நீ தின்ற சோறு நான் போட்டது. தீயில் வெந்து மடியாமல் உன் குடும்பத்தையே காத்தவன் நான். உன்னைப் பெற்றெடுத்தவளைக் காப்பாற்றும் முயற்சியில்தான் நான் ஒரு கண் பார்வையை இழந்து முகத்தின் ஒரு பக்கத்துத் தீத் தழும்புகளையும் பெற்றேன். உன் வியாபாரத்துக்கு முதல் போட்டவன் நான். இன்று நீ அனுபவிக்கும் அனைத்தும் நான் போட்ட பிச்சை என்று நீயே கூறியிருக்கிறாய். ஆனால் முத்தரையனிடமோ நீ நடத்தியது வியாபாரம். நீ அவனுக்கு நன்றி சொல்லும்படி அவன் உனக்கு என்ன செய்து விட்டான்? தீர்வைகளை வசூலிக்காது விட்டானா? பேரம் பேசி உன் லாபத்தைக் குறைக்காமல் இருந்தானா? பார்க்கப் போனால் உன் வாணிபத்தால் அவனுடைய கருவூலம் கொழிக்கிறது. விற்ற பொருளுக்கு உரிய விலை பெறுவதில் நன்றிக் கடன் எங்கே வந்தது?''

''தெளிவு பெற்றேன் –பிரபோ! என்றைக்குப் புறப்படலாம் சொல்லுங்கள்.''

பாய்ந்து சென்று அவனைக் கட்டி அணைத்துக்கொண்டான் விஜயாலயன். ''ஜெயசிங்கா எனக்குத் தெரியும் நீ என்னைக் கைவிடமாட்டாய் என்று!''

''இளவரசே! இன்னும் ஒரு சந்தேகம்.''

''இன்னுமா?'' – பல்லைக் கடித்தான் அராபியன்.

''ஆம் பிரபோ! உண்மையைச் சொல்லுங்கள். சந்திரலேகைக்கு நீங்கள் செல்லும் உண்மைக் காரணம் முத்தரையனது படை பலத்தை எடை போட மட்டும்தானா? வேறு உள் நோக்கம் எதுவும் இல்லையா?'' இவ்வாறு கேட்டு ஜெயசிங்கன் கண் சிமிட்டவும் விஜயாலயன் அவன் எதிர்பார்த்தது போல் சிரித்து மகிழவில்லை. மாருகப்பற்களை நறநறத்தும்விரல்களைச்சொடுக்கியும் தன் கோபத்தை வெளிப்படுத்தியவாறே, ''ஆம் ஜெயசிங்கா! அந்தச் சண்டாளியையும் காணத்தான் போகிறேன்! அல்லும் பகலும் அனவரதமும் தூக்கத்திலும் விழிப்பிலும் உழைக்கும் போதும் ஓய்ந்திருக்கும்போதும் சதா என் நினைவில் நிழலாடி என்னை அலைக்கழித்துச் சித்திரவதை செய்து கொண்டிருக்கும் அந்தப் பேரழகுப் பாவையை, உத்தமசீலி என்ற பெயருக்குப் பொருந்தாத பாதகியைப் பார்க்கத்தான் போகிறேன்! ஜெயசிங்கா! கயல் விழிகளும், மாம்பழக் கதுப்புக் கன்னங்களும், மாதுளை மலர் இதழ்களும் வெண் சங்கனைய கழுத்தும் தாமரை மொட்டுக்களாக நெஞ்சகங்களும் கொடி இடையும், அகன்ற மேகலாபரணப் பகுதியும் நீண்ட தொடைகளும் செம்பஞ்சுக் குழம்பு பூசிய பாதங்களும் என்னைக் காமாதுரனாக மட்டும் செய்து கொண்டிருக்கவில்லை. 'பழிவாங்கு!' 'பழிவாங்கு!' என்று சதா நினைவூட்டிக் கொண்டே இருக்கின்றன! அவள் என்னை மட்டுமா அவமதித்தாள்? என்னைப் பரிகசித்தபோது கரிகால் வளவன், நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி காலம் தொட்டு வளர்ந்து வரும் ஒரு மாவீரப்பரம்பரையையே – ரவிகுலத்தையே அல்லவா இழித்துரைத்தாள்! பொறுப்பானா இந்த ரவிகுல திலகன்!''

இளவரசனின் ஆவேசப் பேச்சுகேட்டு மிரண்டு நடுங்கினான் ஜெயசிங்கன்.

(தொடரும்)

# விஞ்ஞானப் பக்கங்கள்



-மாலன்

ஆ...ஆ...ஆ...அச்சு!

**8.58:** அரை குறையாக மூன்றுவது மாடியைப் பெருக்கித் தள்ளிவிட்டு கப்பக் கிழங்கை வரவேற்றபடி லிப்டில் நுழைந்தான் ஐராவதம். கப்பக் கிழங்கின் மீது அவனுக்கு இருந்த உற்சாகம் அவன் மூக்கிற்கு இல்லை. 'அச்' என்று தும்மி, ஆல் இந்தியா ரேடியோ போல் பாட்டிற்குத் தடை விதித்தது. 'சுக மாலம்' என்று கடிந்துகொண்டு 'பாடாதே வாயைத் தொறந்து...' என்று பாட்டைத் தொடர்ந்தான் ஐராவதம். மூக்கிற்கு மகா கோபம். இந்த முறை இரண்டு முறை தும்மி அவனின் பாட்டை பலமாக ஆட்சேபித்தது. தும்மும்போது கை தானே உயர்ந்து மூக்கை மூடிக் கொண்டது. ''சே! பேஜாரு'' என்று அலுத்துக்கொண்டே '2' பட்டனை அமுக்கிக் கீழிறங்கினான் ஐராவதம்.

8.59: ரோகிணிக்கு அன்று அவசரம். டைப் பண்ண வேண்டிய ஸ்டேட்மெண்டுகள் ஏகமாகப் பாக்கி. ''என்ன பண்ணுவியோ தெரியாது. எனக்குச் சாயங்காலத்துக்குள் வேண்டும்'' என்று மேலதிகாரி கர்ஜித்திருந்தார். அதனால் இன்று விவித் பாரதியை விவாகரத்து செய்து விட்டுச் சீக்கிரம் புறப்பட்டு வந்து விட்டாள். பித்தானை அமுக்கியதும் மந்திரம்போல் காலியான லிஃப்ட் திறந்தது. அவசரத்தில் '2' ஐத் தொட்டாள். 'சை' என்று கடிந்து கொண்டு ஆள் காட்டி விரலால் '3' ஐத் தொட்டாள். ஆபீசை நோக்கி நடக்கும்போது வராந்தாக் காற்றுத் தலையைக் கலைத்தது. கண்ணருகில் விழுந்த கற்றையை ஆள் காட்டி விரலால் காதருகில் ஒதுக்கிக்கொண்டாள். லிப்ட் காற்றில் ஐராவதம் விட்டுப் போன கோடிக் கணக்கான ரைனோ வைரஸ்களில் கால் பங்கு, ரோகிணியின் மூக்கினுள் உள்ள இக்கினியூண்டு தசை மலைகளில் குடியேறின. இரண்டாவது குடியேற்றம் ஆள் காட்டி விரல் மூலம் கண் வழியே நிகழ்ந்தது. புதிய விருந்தினர்கள் சுறுசுறுப் பாகத்தொண்டையைநோக்கி நகர்ந்தார்கள்.

9.05: நீருக்குள் அசைகிற கடல் பாசி போல் நிதானமாக மூக்கின் பாதையில் அசைந்து கொண்டிருந்த சிலியாக்கள் சுறுசுறுப்படைந்தன. விருந்தாளிகளைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ள முயன்றன. நிமிஷத்துக்கு அறுநூறு வீச்சு வேகத்தில் பெருக்கித் தள்ளின. ஆனால் மீனம்பாக்கம் சிவாஜி ரசிகர்கள் போல் திமுதிமுவென்று

நுழைந்த, எண்ணிக்கையில் அதிகமான, ரைனோ வைரஸ்களை அவர்களால் கட்டுப்படுத்த முடியவில்லை.

11.00: தடையை மீறிய விருந்தாளிகள் சுதந்திரமாக உலாவத் தொடங்கினார்கள். மூக்கின் மேல்புற லைனிங்கில் அமைந்திருந்த செல்களைக் கண்டு காதல் கொண்டார்கள். ஏகபத்தினி விரதம் கொண்ட யோக்கியமான காதல். வேறு எந்த வித செல்களையும் ஏறெடுத்துப் பார்க்காத காதல். ரைனோ வைரசின் இருபது முகங்களிலும் தாபத்தைக் கண்ட செல் விழித்துக் கொண்டது. இரு கைகளை வீசித் தன்னுள் அழைத்துக்கொண்டது. ரைனோவின் மேல் சட்டையைக் கழற்றிற்று. இந்தக் காதல்தான் தப்பாகப் போயிற்று.

3.00: ரைனோக்கள் மெல்லமெல்லச் செல்களின் உற்பத்தி மையங்களை ஆக்கிரமித்தன.

இரவு 9.00: மூக்கின் ஒன்பது லட்சம் செல்களிலும் முழுமையான ஆக்கிரமிப்பு. செல்லின் தயாரிப்புக்கள் நிறுத்தப்பட்டன. பதிலாக ரைனோக்கள் சந்ததி தழைக்க அவசியமான 'வைரல்நியூக்ளிக் ஆசிட்' தயாரிப்பு தீவிரமாயிற்று.

2.30: நியூக்ளிக் ஆசிட் தயாரிப்பு போதிய அளவைத் தொட்டதும், செல்கள் மேல் சட்டைகளைத் தயாரிக்க உத்தரவாயின. ஒரு வாரிசு உருவாகிறது.

7.00: வாரிசுகள் அணிவகுக்கப்பட்டன. ஒற்றையாக நுழைந்த ரைனோவிற்கு ஒவ்வொரு செல்லுக்குள்ளும் நூறு புத்திரர்கள்.

9.00: உள்ளே நுழைந்த இருபத்தி நாலு மணி நேரத்துக்குள் ஒன்று நூறாக, அந்தக் கௌரவர்கள் செல்களைப் பிளந்துகொண்டு புறப்பட்டார்கள். ஒன்பது லட்சம் செல்களிலிருந்து ஒன்பது கோடி வைரஸ்கள். காயம் அடைந்த செல்கள் வீர மரணம் அடைந்தன.

ன. பலர் லிம்ஃபோ சைட்களின் தலைமை செயலகமான லிம்ஃரோட்களுக்கு அழைத்துச் செல்லப்பட்டு அவர்களின் ஆயுதங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. முதல் நாள் வெற்றி ரோகிணிக்குத்தான். ஆனால்—

இரண்டாம் நாள்: இரண்டாவது தலைமுறை வாரிசுகள் — இந்த முறை தொள்ளாயிரம் கோடி. போன தலைமுறை போல் நூறு மடங்கு — ரத்தத்தில் புகுந்தார்கள். மூக்கில், லட்சக் கணக்கான செல்கள் மரணமடைந்து குவிந்தன. அவைகளை அகற்ற ஒரு திரவம் சுரந்தது. ரோகிணி மூக்கை உறிஞ்சிக் கொண்டு 'சளிப் பிடிக்கிறது போலிருக்கிறதே' என்று கவலைப்பட்டாள். — மூன்றும் நாள் கட்டுக்கடங்காத இனப் பெருக்கம். ரோகிணியின் கண் மூக்கெல்லாம் வெள்ளம். தலைக் கனம். உலர்ந்த தொண்டை.

நாலாம் நாள் அதிசயம் நடந்தது. வைரஸ்கள் சிவப்பு முக்கோணத்தைக் கடைப்பிடித்தன. இனப் பெருக்கத்துக்கு புல்ஸ்டாப். எப்படி இந்த மாயம் நிகழ்கிறது; அதுதான் விஞ்ஞானிகளுக்குப் புரிய வில்லை.

மனிதன் இன்னும் ஜெயிக்க முடியாத சவால்களில் ஒன்று, ஜலதோஷம். ரைனோ வைரஸ் சரியான கல்லுளி மங்கன். 130 டிகிரிவரை உஷ்ணத்தைத் தாக்குப் பிடிக்கும். புலி ஈர்ப்புச் சக்தியைப் போல் லட்சம் மடங்கு பெரிதான விசைகூட அதை நசுக்கி விட முடியாது. இது தவிர ஆயிரம் உண்டங்கு ஜாதி. அதனால் அம்மைக்கு அம்மைப் பால் போல் ஜலதோஷத்துக்கு ஒரு பால் (வாக்சின்)சாத்தியமற்றுப் போகிறது. நீங்கள் ஜலதோஷத்துக்குச் சாப்பிடுகிற மருந்துகள் ஆன்டி பயாடிக்கள் உள்பட இந்த வைரஸ்களை ஒன்றும் அசைக்க முடியாது. இவற்றால் ஏற்பட்டுள்ள இதர உப சங்கடங்களை வேண்டுமானால்சரி செய்யலாம்.

# ஐயோ பாவம் ரோகிணி!

9.20: ஆபீசுக்கு வரும்போதே தொண்டை கரகரவென்று இருப்பதை உணர்ந்தாள் ரோகிணி. 'வழக்கமான காப்பிக்குப் பதில் டீ குடித்தால் என்ன?' என்று தோன்றியது. பையனைக் கடைக்கு அனுப்பினாள். அவள் தொண்டையில் மகா யுத்தம் நடந்து கொண்டிருந்தது. இருமலின் மூலம் வெளியே தள்ளப்பட்ட ஆயிரக் கணக்கான வைரஸ்கள் சூரிய ஒளியில் சொர்க்கம் போயின. டீ வெள்ளத்தில் அடித்துக் கொண்டு செல்லப் பட்ட இன்னொரு ஆயிரம் வயிற்றில் அமிலத்துக்குப் பலியாயின. பதற்றத்துக்கு ஆளாகி அங்கும் இங்கும் தறிக்கெட்டு ஓடின. சில டான்சில்ஸிலும், அடிநாய்ட்டிலும் மோதிக் கொண்டபோது அலாரம் அடித்தது. பாரா சுற்றிக் கொண்டிருந்த லிம்போ சைட்கள் சுறுசுறுப்பாகி வைரஸ்களைத் தாக்

அலக்ஸாண்டர் ஃப்ளெம்மிங் என்றொரு ஆசாமி பென்சிலினைக் கண்டு பிடித்தபோது, உலகம் அல்லோலகல்லோலப்பட்டது. உலகத்தின் சகல துக்கங்களையும் பென்சிலின் பொடியாக்கிவிடும் என்று அநேகம் பேருக்கு ஒரு அசுர நம்பிக்கை. ஃப்ளெம்மிங் நோபல் பரிசைப் பெற்றுக் கொள்ளப் போகிற அன்று அவருக்குப் பயங்கர ஜலதோஷம். பெயரைக் கூப்பிட்டதும் எழுந்து மேடைக்குப் போவதற்குள் ஏகப்பட்ட அடுக்குத் தும்மல் போட்டார் ஃப்ளெம்மிங். கூட்டத்திலிருந்த ஒருத்தி கேட்டாள், ''இந்த பெனிசிலின் ஜலதோஷத்துக்கு ஒன்றும் வழி காட்டாதோ?'' கூட்டம் சிரித்தது. ஃப்ளெம்மிங் சிரித்தார். ஜலதோஷமும்தான்.

படம்: உத்ரா
நடிப்பு: ஙளிளி

**''என்னை மன்னித்து விடுங்கள்; கண்ணன். எனக்கு வரப்போகிறவர் நல்ல கணவராக-ஊனமில்லாதவராக வரணும். நான் எப்படி உங்களைக் கல்யாணம் செய்துக்க முடியும்....?''**

டார்ஜிலிங்கின் பனித்திரை விளக்குகளை எல்லாம் போர்த்தி விட்டன. ஏழு மணிக்கெல்லாம் தெருவில் நடமாட்டம் குன்றி விட்டது. ஸ்வெட்டரை இழுத்துக்கொண்டு வெளியே வந்தான் கண்ணன். அந்தத் தங்கும்விடுதி, உணவு விடுதியிலிருந்து சற்றுத் தள்ளி இருந்தது. பழக்கத்தின் காரணமாக விடுவிடென்று நடந்தான்.

அவனை யாரும் பார்வையில்லாதவன் என்று கூற மாட்டார்கள். அவ்வளவு லாகவமாக நடந்து கொள்வான். டார்ஜிலிங் மலைப் பகுதிப் பள்ளி ஒன்றின் சங்கீத ஆசிரியர் அவன். நிறைய வாத்தியங்கள்வாசிக்கத் தெரியும். இந்தப் பள்ளியில் பிடாரும், வயலினும் அவன் சொல்லிக் கொடுத்தான்.

''சென்னையிலிருந்து இவ்வளவு தூரம் போக வேண்டுமா? நீ சம்பாதிக்கலேன்னு யார்டா கண்ணா சொன்னா?'' அம்மா தடுத்தது நினைவுக்கு வந்தது.

யார் சொன்னார்கள்? யார் அவன் மனசைப் புண்படுத்தினார்கள்? ராதா! கண்ணில்லாத அவனுள் கற்பனையை வளர்த்தவள். காதல் என்ற பண்ணுக்கு இசையாக நின்றவள். கலீரென்ற சிரிப்பில் அவன் சிந்தனையைக் குளிர வைத்தவள்.

''கண்ணா,எனக்கு வீணைசொல்லித்தரயா?''

மாமா பெண். சிறு வயது முதல் பழக்கம். அவனுக்குப் பார்வைக் குறைவு ஏற்படும் பொழுது தாவணியும் நாணமுமாகக் குழைந்தவள். அப்படியே அவன் மனத் திரையில் பதிந்து போனாள். மனத் திரையில் அவனுக்கு வளர்ச்சி இல்லை. அவன் மட்டும் ரசிக்கும் ஓவியமாக—

''இன்னிக்கு வீணைப் போட்டியில் எனக்குத்தான் முதல் பரிசு.''

''கங்க்ராட்ஸ்'' — கையை நீட்டியவளின் கரத்தைப் பிடித்துக் குலுக்கினான்.

''இத்தனை மென்மையா?'' வாய் விட்டுக் கூறினான். அவள் கலகலவென்று சிரித்துவிட்டாள்.

ஒருவரும் அருகில் இல்லாததை உணர்ந்து ''ராதா, ஐ லவ் யூ'' என்று கூறிவிட்டான். நெஞ்சில் பயம் டமாரம் தட்டியது. ராதா என்ன நினைக்கிறாள்? கதைகளில் வருவது போல முகம் நாணத்தால் குழம்பி இருக்குமோ? ராதாவின் சிரிப்பு கப்பென்று அடங்கி விட்டது.

''ராதா, பேசு ராதா.''

''என்னத்தைப்பேசணும்னுநினைக்கிறீங்க?''

''என்ன ராதா, நீ நான் கேட்டதற்குப் பதிலே சொல்லவில்லை?''

ராதா, தீர்மானமாகக் கூறினாள். ''என்னை மன்னித்துவிடுங்கள் கண்ணன். எனக்கு வரப்போகிறவர் நல்ல கம்பீரமானவராக—ஊனமில்லாதவராக வரணும். நான் எப்படி உங்களைக் கல்யாணம் பண்ணிக்க முடியும்? உங்களாலே என்னைப் பார்க்கவா முடியும்?''

ராதா அவனுடைய உணர்ச்சிகளை நினைக்காமல் பேசிக் கொண்டே போனாள்.

''ஸாரி ராதா, நான்தான் உன்னைத் தப்பாகப் புரிந்து கொண்டு விட்டேன். இதை மறந்துவிடு.''

அடுத்த இரண்டு மாதங்களில் ராதா ஒரு ஐ. ஏ. எஸ்.ஸை மணந்து கொண்டாள். அவன் அப்படியே உடைந்து போனான். ஊனமான அவன் அவளைக் கேட்டது தவறோ? எவ்வளவு அழைத்தும் அவள் திருமணத்துக்குப் போகவில்லை. ராதா வந்தபொழுது கூட அவன் சரியாகப் பேசவில்லை. அந்தச் சமயத்தில் கல்கத்தாவில் உள்ள அவன் நண்பன் ராஜு வந்தான்.

''டார்ஜிலிங் பள்ளி ஒன்றில் சங்கீத ஆசிரியர் தேவை. நீ வரியா. என்னால ஏற்பாடு பண்ண முடியும்.''

ஊமை அடி வலித்தது. ஒப்புக்கொண்டான். ஆனால் தனியாகப் பழக்கமில்லாத ஊரில் வந்து மாட்டிக் கொண்டு — அந்தக் குளிரில் தவித்து—

சிந்தனை வேகத்தில் டொக்கென்று முட்டிக் கொண்டான்.

''கண் இல்லே?'' என்ற பெண் குரல்.

நெஞ்சைத் தாக்கிய சொற்கள்.

''எஸ் மேடம். ரியலி ஐயாம் பிளைண்ட்.''

முன்பின் அறியாதவளிடம் ஒப்புக்கொள்ளும்பொழுது உண்மை கசந்தது. குரல் தழுதழுத்தது.

''ச்சு... ஸோ... ஸோ.... சாரி....''

இப்படித்தான் உமாவிடம் அறிமுகம் ஏற்பட்டது. அவள் அங்குள்ள விவசாய இலாகா பிரிவில் வேலை செய்தாள். ஓர்கிங் விமன்ஸ் ஹாஸ்டலில் தங்கி வந்தாள். கண்ணன் அவளிடம் அதி ஜாக்கிரதையாக நடந்து கொண்டான். ஏற்கனவே ராதாவிடம் அடி பட்டவனாயிற்றே!

ஆனால் உமா தன் மனத்தைத் திறந்து காட்டியபொழுது—

''ரியலி உமா? நான் கனவுகாணவில்லையே! கிள்ளிப் பார்த்துக் கொண்டான்.

அவள் கலகலவென்று சிரித்தாள்.

''ஊர்ல யாருக்கும் சொல்ல வேண்டாமா உமா?''

''ஊர்ல யார் இருக்காங்க கண்ணன்? அங்கே அப்பா இல்லை. இளைய தாயார் தான். என்னைப் பத்திக் கவலையா படப் போறாங்க?''

அவனும் தன் அம்மாவுக்குத் தெரியப்படுத்தவில்லை. கண் இல்லாதவன் என்று

யார் பெண் தருவாங்கன்னு நினைச்சவங்க தானே? யார்மீதோ உள்ள கோபத்தை அம்மா மீது காட்டினான். ஒரு நாளாவது கல்யாணம்னு வாயைத்திறந்து பேசி இருப்பாங்களா? உமாவின் பெரிய மனசு யாருக்கு வரும்?

சிம்பிளாக அவளுடைய தோழிகள் இருவர் சாட்சிக்கு வர ரிஜிஸ்டர் கல்யாணம் நடந்து விட்டது.

"உமா, எனக்கு இன்னும் நம்பிக்கை வரவே மாட்டேங்குது. நீ நிஜமாத்தான் என்னை ஏத்துண்டியா? உன் அழகைப் பார்க்க புகழ எனக்குக் கண் இல்லை உமா!"

தளிர்க் கரத்தால் அவன் வாயைப் பொத்திய உமா "உங்க அக அழகு எனக்குப் புரியுது. என் அக அழகைப் பாருங்க. அதைப் புரிஞ்சுக்கங்க" என்றாள் மெல்ல.

பனி கொட்டிய ஒரு மாலை. அவர்கள் பூங்காவுக்குப் போகவில்லை. இனிய தேநீருடன் அவன் அறையின் கணப்பில் உட்கார்ந்தபொழுது அவள் கையில் இனிப்புடன் வந்தாள்.

"என்ன உமா?"

"வாயைத் திறங்க."

பால் கேக் கலைத்தது.

"என்ன விசேஷம் உமா?"

அவன் தோளில் அவள் சாய்ந்தாள்.

"நீங்க அப்பா ஆகப் போறீங்க!"

அவ்வளவுதான். அவன் மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை. அடுத்த நாளே டாக்டர் டாக்டராக அவளை அழைத்துக் கொண்டு போய் மருந்தும் மாத்திரைகளுமாக வாங்கி அடுக்கினான்.

"டாக்டர், என் குழந்தைக்குக் கண் தெரிய வேண்டும்" என்று அடிக்கடி கெஞ்சினான்.

அவனுடைய நச்சரிப்பு டாக்டருக்கே எரிச்சலைக் கொடுத்தது.

"என்னமேன், அதான் மாத்திரை மருந்து எல்லாம் கொடுத்திருக்கேன். சாப்பிடச் சொல்லு" என்று அனுப்பி வைத்தார்.



"போனவார ம,வி.டிராமாவைப் பாராட்டியும் குறை சொல்லியும் ஆயிரக் கணக்கான லட்டர் வந்தது ரொம்ப ஆச்சரியமா இருக்கு."

"இதிலே ஆச்சரியம் என்ன இருக்கு?"

"போன வாரம் தான் எதிர் பாராத காரணங்களாலே டிராமாவே நடக்கலையே!"

-பாதுஷா

இரவில் உமாவை மென்மையாக அணைத்தபடி "நீ பெரிய மனசு பண்ணி என்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு இருக்கே. உன் குழந்தைக்காவது கண் தெரிய வேண்டும்" என்று பதை பதைத்தான்.

"எனக்கும் அதாங்க கவலை" என்று உமா கூறியதும் அவன் பெரிதும் அதிர்ச்சி அடைந்தான்.

ஓ... அவனைக் கல்யாணம் செய்துகொண்டது அவள் செய்த தியாகம். ஆனால் அவள் ஒரு குருட்டுக் குழந்தையைச் சுமக்கலாமா? நெஞ்சு ரணமாகியது.

அந்தப் பெரிய மருத்துவ மனையில் ஓர் அறையில் உமா அவதிப்பட்டுக் கொண்டிருந்தாள். கண்ணன் வெளியே உலாவிக்கொண்டிருந்தான்.

"கடவுளே! நல்லபடியாக எனக்கு உமாவைக் கொடு! அதோடு கூட குழந்தைக்குக் கண் கொடு."

முதல் நாள் இரவு பத்து மணிக்கு எடுத்த வலி. இன்னும் குழந்தை பிறக்கவில்லை. அவனுக்கும் உணவும் உறக்கமும் இல்லை. உமாவின் முனகல்கள் நெஞ்சைக் குத்தின.

"குழந்தை நல்லாப் பிறந்திடுமா? ஒண்ணும் காம்ப்ளிகேஷன்ஸ் இல்லையே?" என்று குறுக்கும் நெடுக்கும் செல்லுபவர்களிடம் கேட்டான்.

நர்ஸ்கள் பதிலா சொல்லுவார்கள்?

கடைசியில் அன்று மாலை நான்கு மணிக்கு ஒரு நர்ஸ் அவனுக்கு ஆண் குழந்தை பிறந்த செய்தியைக் கொண்டு வந்தாள்.

"சிஸ்டர், குழந்தைக்குக் கண்...."

"உம்...உம்..." — போய்விட்டாள்.

வார்ட் பாய் அவனை உமாவின் படுக்கை அருகில் கொண்டு விட்டு விட்டுப் போனான்.

"உமா.... உமாக் கண்ணு... கங்ராஜுலேஷன்ஸ்... கையைக் கொடு."

மெல்லப் படுக்கையைத் துழாவினான்.

உமா குப்பெலறு கேவினாள்.

"உமா... உமா... என்னாச்சு?"

அவள் பலமாக அழுதாள்.

"உமா குழந்தைக்குக் கண் தெரியுது இல்லே?"

தன்விசும்பலை அடக்கியவள் "தெரியுதுங்க, ஆனா தெய்வம் என்னைக் கேட்டுடுச்சு" என்றாள்.

"என்ன சொல்றே உமா? குழந்தையை நான் தொட்டுப் பார்க்கலாமா?"

"உங்களுக்குக் கண் தெரியாததினால் குழந்தை எங்கேயாவது குருடா பிறந்திடுமோன்னு பயந்தீங்க. ஆனா... நான்? எனக்கு வலது கால் கொஞ்சம் ஊனம். அதைப் பார்வை இல்லாத உங்க கிட்ட மறைச்சேன். தெய்வம் காட்டிக் கொடுத்திடுச்சு. நம்ம குழந்தையும் கால் ஊனமா பிறந்திடுச்சு. நான் தியாகம் பண்ணினதா நீங்க நினைச்சீங்க....."

உமாவின் கேவலை நிறுத்தும் சக்தி கண்ணனுக்கு இல்லை.




● அட்டையில் ராஜஸ்ரீயின் கைகள்தான் நாட்டிய அபிநயத்தில் கெஞ்சுகின்றன என்றால் அந்த ஒளி மயமான கண்களும் முக பாவமும் கோபுரப் பின்னணியில் என்ன மாய்க் கொஞ்சுகின்றன! அருமையான காமிரா ஷாட்! பலே!

தேவகோட்டை — திருமதி விஜயா முரளி

● தலையங்கம் பார்த்தேன். இனிமேல் எல்லாப் பத்திரிகைகளும் சினிமாப் படங்களுக்குப் பதிலாக அரசியல் பிரமுகர்களின் படங்களையும் காதல் கதைகளுக்குப் பதிலாக நீதி போதிக்கும் பஞ்ச தந்திரக் கதைகளும் வெளியிட்டால்தான் பிழைப்பு நடத்த முடியும் போலும்! வாழ்க பத்திரிகை சுதந்திரம்!

கல்பாக்கம் — சி. பி. ராஜு

● என். டி. ராமராவ் பேட்டி மனத்துக்கு இதமாக இருக்கிறது. 'பாரதிய ஜனதா' வைப் போன்று ஊழலை ஒழிக்க ஒரு கட்சி தொடங்கினால் நல்லவர்கள் நிச்சயமாக ஆதரிப்பார்கள்.

கல்கத்தா — வி.ஏ. ராஜு

● அரிதாரம் பூசி அலுத்தவர் அரசியலில் அடியெடுத்து வைத்தவுடனேயே ஆட்சியைப் பிடிப்பேன் என்கிறார். எம். ஜி. ஆர். விஷயம் அலாதியானது. ஆனால் 'நினைத்ததை முடிப்பேன்' என்று இவர் சொல்லியிருக்கிறாரே யன்றி வாக்குறுதிகளை நிறைவேற்றுவேன் என்று சொல்லவில்லை.

சென்னை-33 — டி. எஸ். வீரராகவன்

● புத்தாண்டில் போனஸ் ஒன்றும் இல்லையா எனக் கல்கியைப் புரட்டிக் கொண்டிருந்த போது சவீதாவின் 'ஒன்றும் ஒன்றும் ஒன்று' கிடைத்தது. அமர்க்களப்படுத்தி விட்டார் சவீதா.

தக்கலை — க. நாகரத்தினம்

● வீட்டில் மூத்தவனாகப் பிறக்கும் ஆண் மகனுக்கும் புகுந்த வீட்டில் மூத்த மருமகளாகச் செல்லும் பெண்ணுக்கும் ஏற்படும் தர்ம சங்கடங்கள் ஏராளம். அதனை மையமாக அமைத்து ''அவரவர் உலகம்'' என்று உமாசந்திரன் சிருஷ்டித்துத் தந்த அந்த உலகம் மனத்தை இழுத்தது!

மதுரை — பி. எல். பரமசிவம்

● 'கவர்ச்சிகள்' முதல் அத்தியாயமே ஆசிரியர் கிருஷ்ணமணி கல்கி வாசகர்கள் மனங்களிலும் 'வேரூன்றி' விடுவார் என்று புலப்படுத்தியது.

ஸ்ரீரங்கம் — ரோகிணி ஸ்ரீனிவாசன்

● கோவை அரங்கநாயகன் எழுதிய 'திட்டமிட்டா வளருது இட்டச்சேரி' கட்டுரை இந்து முஸ்லிம் ஒற்றுமையைப் பளிச்செனப் படம் பிடித்துக் காட்டுகிறது. இக்கட்டுரையைப் படித்துத் தமிழகத்தில் எல்லா கிராம மக்களும் பயன் பெறுவார்கள் என நம்புகிறேன்.

சென்னை-1 — நாகை ஜி. அஹமது

● கடந்த சில வாரங்களுக்கு முன் நம்முடன் பகிர்ந்து கொண்ட பொக்கிஷக் கடிதங்களில் தன் தந்தையின் கடிதத்தையும் தவறாமல் குறிப்பிட்டிருந்தார் சுஜாதா. அண்மையில் சுஜாதாவின் தந்தை மறைந்து விட்டார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தண்டையார்பேட்டை — எம். ராஜப்பா

● உதகை அரசினர் கலைக் கல்லூரி மாணவர்கள் பேசிக்கொள்ளும்போது உருவாகும் புதிய வார்த்தைகளில் ஒன்று ''டங்கர் டோல்'' — பைத்தியக்காரன் என்பது இதன் பொருள்.

உதகமண்டலம் — ஆர். ராஜ்குமார்

● எங்கள் ஊருக்கு ஒரு எம். பி. பி. எஸ். டாக்டரை நியமித்து மூன்று மாதங்களுக்கு மேலாகிறது. இந்த நேரத்தில் இப்படி ஒரு கட்டுரையா? இவ்வளவு அழகாக எழுதக் கூடிய ஒருவரும் எங்கள் ஊரில் இருக்கிறார் என்பதையும் கட்டுரையில் குறிப்பிடாமல் விட்டுவிட்டாரே!

இட்டச்சேரி — வி. மோகன்

தாளிப்பு: 'கடுகு'

அன்றொரு நாள் நான் மகாகவி பாரதியின் பாடல்களை உரக்கப் படித்து ரசித்துக் கொண்டிருந்தேன். அந்தச் சமயம் என் நண்பரும் அரசியல் வாதியுமான திரு அசமஞ்சம் என்னைப் பார்க்க வந்தார்.

''என்னய்யா படித்துக் கொண்டிருக்கிறீர்' என்று கேட்டார்.

''மகா கவி பாரதியாரின் பாடல்களை இப்படிப் படிப்பது என் வழக்கம்... இப்போது அவருடைய நூற்றாண்டைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறோம்.''



# வாழ்க பாரதியார்!

''ஒரு பாட்டைப் படியேன்.''

''அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்ப-தில்லையே. இச்சகத்துளோரெலாம் எதிர்த்து நின்ற போதினும் அச்சமில்லை...''

''பெர்மாதமா இருக்கே..இது போதும்பா. இதை வச்சுக்கினு பாரதியார் புகழை நான் பரப்பிடுவேன். கூட்டத்துக்குக் கூட்டம் அவரைப் பத்திப் பேசறேன்'' என்று சொல்லி விட்டுப் போனார் அசமஞ்சம். சொன்ன படியே அவர் எல்லாக் கூட்டங்களிலும் பாரதியாரைக் கொண்டு வந்தார்.

அவர் கலந்துகொண்டு சில கூட்டங்களில் பேசிய உரைகளை இங்கு தருகிறேன்.

## கோணி வியாபாரிகள் சங்கம்

''...எனக்கு முன்பு பேசியவர் ''ஐயோ, பிளாஸ்டிக் பைகள் வந்து விட்டனவே... கோணி வியாபாரம் படுத்து விடுமா' என்று கவலைப்பட்டார். பெட்ரோல்தான் பிளாஸ்டிக்குக்கு மூலப் பொருள். அதற்குப் பற்றாக் குறை ஏற்பட்டு வருகிறது. சணலோ ஆண்டவனால் தாராளமாகத் தரப்படும் செடி. ஆகவே கோணிக்கு என்றும் நலிவு ஏற்படாது. பாரதியார் சொன்ன மாதிரி அச்சமில்லை அச்சமில்லை, அச்சமென்பதில்லையே.''

## பஸ் டிரைவர்கள் மகாநாடு

''நீங்கள் பஸ்ஸை ஓட்டிக் கொண்டு போகும்போது எதிரே யாராவது வந்து மாட்டிக் கொண்டு விடப் போகிறார்களே என்று பயந்து கொண்டே ஓட்டாதீர்கள். பாரதியார் சொன்ன மாதிரி இச்சகத்துளோரெலாம் எதிர்த்து வந்தாலும் அச்சமில்லை, அச்சமில்லை. காலில் பிரேக் இருக்கக் கவலை ஏன்? பாரதியார் மகா கவி என்று சும்மாவா சொன்னார்கள்.

## சென்ஸார் அலுவலக விழா

''இப்போ முத்தக் காட்சி சினிமாவிலே இருந்தா என்னான்னு கேக்கறாங்க. சென்ஸார் ஏன் வெட்டிடறாங்கன்னு சில பேர் காரசாரமா உங்களைப் பேசறாங்க. அதைப் பத்திக் கவலைப்படாதீங்க. நம்ப பண்பாட்டை நாம காப்பாத்தணும். பாரதியார் கூட இதை மனசில் வெச்சிக்கிட்டுத்தான் சொன்னாரு 'இச்' சகத்திலுளோர் எலாம், அதாவது முத்தம் என்ற காம உலகில் இருப்போர்கள் எல்லாம் எதிர்த்துநின்றபோதிலும் அச்சமில்லை... அச்சமில்லை.....''

## விண்வெளி விஞ்ஞானிகள் அரங்கு

மகா கவி பாரதி பெரிய ஞானி. அன்று அவன் சொன்னதை இன்று நீங்கள் ஆராய்ச்சியின் மூலம் நிரூபித்து வருகிறீர்கள். இந்தப் பரந்த பிரபஞ்சத்தில் எத்தனையோ கோள்கள் உள்ளன. பூமியைப் போல் அங்கும் வாழ முடியும் என்பதை நிச்சயம் விஞ்ஞானிகள் கண்டு பிடிக்கப் போகிறீர்கள். அதனால்தான் பாரதி பாடினான். 'இச்சகத்துளோரெலாம் எதிர்த்து நின்றபோதினும் அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே என்று. ''இந்தப் பூமியில் எல்லாரும் எதிரியாகிவிட்டால் எங்கே போவது என்று பயப்படாதீர்கள். சந்திரனில் அல்லது வேறு கிரகத்தில் போய் வாழலாம். ப்சாத்து உலகத்தினர் எதிர்ப்புக்கு அஞ்சாதீர்கள்'' என்ற கருத்தில்தான் அவன் பாடியிருக்கிறான்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran



# பிலிப்ஸ் நான்கு பாண்டு ரேடியோக்கள் இன்றுபோல் என்றுமே விளங்கிடும் இதன் சிறப்பு.



**ஸ்கிப்பர் FM**

- இந்தியாவின் முதன் முதல் நான்கு பாண்டு FM ரேடியோ
- 1000mW அவுட்புட்; 15 செ.மீ.x10 செ.மீ லவுட் ஸ்பீக்கர்
- மின்சாரத்தில் தடங்கல் ஏற்படின் எலெக்ட்ரோமாடிக் சுவிட்ச் ஓவர் மூலம் பாட்டரிக்கு மாற்றிக் கொள்ளும் வசதியுடையது. மின்சார மாடல்



**வாலியண்ட்**

- 4 பாண்டு
- உள்ளே பாட்டரி எலிமினேட்டரை பொருத்தி மின்சாரத்தில் இயக்கலாம்

வழங்குவோர் பிலிப்ஸ். 50 ஆண்டுகளுக்கும் மேலாக இந்தியாவில் இல்லங்களெங்கும் முழங்கும் நம்பகமான பெயர்

**பிலிப்ஸ்**

பைகோ எலக்ட்ரானிக்ஸ் அண்ட் எலக்ட்ரிகல்ஸ் லி.

CASPR-806.104 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka